# திருக்குறளில் பொதுநிலை உத்திகள்

முனைவர் பொன். சௌரிராசன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# திருக்குறளில் பொதுநிலை உத்திகள்

முனைவர் பொன். சௌரிராசன்




**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES**
இரண்டாவது முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம், தரமணி, சென்னை - 600 113

மு. வ. அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியோர் - கொடையாளர் பலர்)
வரிசை எண் : 9 நாள்: 16/02/05

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | Tirukkuraḷil Potunilai Uttikaḷ |
| Author | : | **Dr. Pon. Sourirajan**<br>(Retd.,) Prof. of Tamil<br>Sri Venkateswara University<br>Tirupati - 517502 |
| General Editor | : | Dr. S. Sivakami<br>Associate Professor<br>Faculty of Tamil Literature<br>and Manuscriptology<br>International Institute of Tamil Studies |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus, Taramani<br>Chennai - 600 113. Ph: 22542992 |
| Publication No. | : | 533 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2005 |
| Paper Used | : | 18.6 TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | viii + 104 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 30/- (Rupees Thirty only) |
| Printing | : | CREATIVE ENTERPRISES<br>203, Arcot Road, Vadapalani<br>Chennai - 600 026 |
| Subject | : | Common Techniques in Tirukkural |

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை – 600 113

# அணிந்துரை

திருக்குறள் உலகப் பொதுநூல். சாதி, மதம், இனம் கடந்த நிலையில் உலக மக்கள் அனைவருக்கும் ஏற்ற நூல். இது தனி மனித வாழ்க்கை நெறிகளையும், தனி மனிதன் சமுதாயத்தோடு உறவு கொண்டுள்ள நிலையில் அவன் கடைப்பிடிக்க வேண்டிய முறைமைகளையும், அவ்வுறவுக்குப்பின் அமையவேண்டிய சமுதாய வெளிப்பாடுகளையும் எடுத்து விளக்குகிறது. அகவாழ்வு, புறவாழ்வு எனும் இருபெரும் வாழ்க்கை முறைமைகளின் அனைத்துக் கூறுகளையும் பொதுமை நிலையில் எடுத்துக் கூறுவதால் தான் இதனை உலகப் பொதுமறை என்று கூறுவர். இத்தகு திருக்குறள் பற்றிப் பல்வேறு ஆய்வுகள் தமிழக அளவிலும், இந்திய அளவிலும், உலக அளவிலுமாக நடைபெற்று வந்துள்ளன. திருக்குறளை ஆய்ந்தவர் பலர்; ஆய்வு செய்கின்றவர் பலர் என ஆய்வுக் களம் விரிந்து பரந்து செல்வதை நாம் காணலாம்.

இந்நிறுவனத்தில் கொடையாளர் பலரால் நிறுவப்பட்டுள்ள மு.வ. அறக்கட்டளையின் 9ஆம் சொற்பொழிவாக நடைபெறும் இச்சொற்பொழிவை ஸ்ரீவெங்கடேஸ்வரன் பல்கலைக்கழக முன்னாள் தமிழ்த்துறைப் பேராசிரியர் முனைவர் பொன். சவுரிராசன் நிகழ்த்துகிறார்கள். மு.வ. மீதும் திருக்குறள் மீதும் ஆழ்ந்த பற்றுக்கொண்ட பேராசிரியர் பொன். சவுரிராசன் அவர்கள் இச்சொற்பொழிவை நிகழ்த்துவது மிகவும் பொருத்தமானதாகும். அவர்களுக்கு நிறுவனத்தின் சார்பில் பாராட்டு களையும், நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

**திருக்குறளில் பொதுநிலை உத்திகள்** எனும் தலைப்பில் வெளி வரும் இந்நூல் திருக்குறளில் காணப்படும் சுட்டுதற்குரிய சில உத்திகளை மையமாகக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளது. அவ்வுத்திகளை இனம் கண்டு வகைப்படுத்தி இருப்பது திருக்குறளுக்கு மேலும் அழகூட்டுவதாகவும், சுவை ஊட்டுவதாகவும், பெருமை சேர்ப்பதாகவும் அமைகின்றது. திருக்குறள் பற்றிய ஆராய்ச்சி எல்லையில் இந்நூல் ஒரு புதுவரவாக அமையும் என்பதில் ஐயமில்லை. இவ்வறக்கட்டளைச் சொற்பொழிவு நடைபெறுதற்கும் நூல் வெளிவருதற்கும் உதவிய அறக்கட்டளைப் பொறுப்பாளர், இலக்கியம் மற்றும் சுவடியியல்புல இணைப்பேராசிரியர் முனைவர் ச. சிவகாமி அவர்களுக்கு நன்றி.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வி (ம) வணிகவரித்துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம்** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திருமிகு **பு.ஏ. இராமையா இ.ஆ.ப.,** அவர்களுக்கும், சிறப்புச் செயலாளர் **திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளி அச்சுக்கோப்புச் செய்த இந்நிறுவனக் கணிப்பொறி உதவியாளர் ஸ். கோபிநாத்திற்கும், அழகுற அச்சிட்டுத்தந்த கிரியேட்டிவ் அச்சகத்தார்க்கும் பாராட்டுகள்.

சென்னை
*31-1-2005*

இயக்குநர்



# ஆசிரியர் அறிமுகம்

| | | |
|---|---|---|
| பெயர் | : | முனைவர் பொன். சௌரிராசன் |
| முகவரி | : | எப்எப் 4, நிகரிக அபார்ட்மெண்ட், காயத்ரி நகர், திருப்பதி 517502 |
| வயது, பிறந்தநாள் | : | 72, 6-4-1932 |
| கல்வித் தகுதி | : | பிஏ.(ஹானர்ஸ்), பிஎச்டி, டிப்.(மொழியியல்) |
| முனைவர் பட்ட ஆய்வு | : | தாயுமானவர் |
| விருப்ப ஆய்வுப்புலம் | : | செம்மை இலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள் |
| பணியாற்றிய இடங்கள் | : | சித்தூர் அரசினர் கல்லூரி, ஸ்ரீ வெங்கடேஸ்வரா பல்கலைக்கழகம்-திருப்பதி, திராவிடப் பல்கலைக் கழகம்-குப்பம், ஆந்திரா. |
| வெளிவந்துள்ள நூல்கள் | : | 31 |
| " கட்டுரைகள் | : | 40 |
| பங்கேற்ற கருத்தரங்குகள் | : | 52 |
| பெற்ற பரிசுகள் | : | தமிழக அரசு முதற்பரிசு 1979 (தியாகம் - புதினம்) |
| | | சிறந்த ஆசிரியர் விருது 1987-1988 (ஆந்திர மாநில அரசு) |
| கல்விப்பயணம் | : | மலேசியா, சிங்கப்பூர் |
| பிற சிறப்புகள் | : | மதுரை, அழகப்பா, தமிழ், அண்ணா மலை, பாரதியார், சென்னை, பாண்டிச்சேரி, வெங்கடேஸ்வரா, கர்நாடகா, மைசூர் எனப் பல பல்கலைக் கழகங்களின் பல்வேறு குழுக்களின் உறுப்பினராகச் செயல்பட்டுள்ளார். |
| | | பல்கலைக்கழக நல்கைக்குழு, சாகித்திய அக்காதெமி ஆகியவற்றிலும் பல பொறுப்புகள். |
| | | புதினம், கவிதை படைப்பாளர். |
| | | தெலுங்கு மற்றும் ஆங்கில நூல்களின் மொழிபெயர்ப்பாளர். |

# நன்றியுரை

இன்று உலக அறிஞர் பலர் சிந்தனையில் திருக்குறள் பயின்று வருகிறது. தமிழன், தமிழாசிரியன் வாழ்விலும் அவ்வப் போது ஊடாடி வழிகாட்டி வருகிறது. அப்படி என் வாழ்வில் கற்றல், கேட்டல், கருதுதல், கற்பித்தல் ஆராய்ச்சிக் கட்டுரை சில எழுதுதல், உலகத் திருக்குறள் மாநாட்டில் கலந்து கொள்ளல், சொற்பொழிவாற்றல், இப்படிப் பல நிலைகளில் திருக்குறள் வாழ்ந்தும் வாழ்வித்தும் வந்துள்ளது. அவற்றுள் திருக்குறள் என் வாழ்வில் குறுக்கிட்ட நான்கு நிகழ்ச்சிகள் அடிக்கடி என் நினைவில் வருவன.

ஒன்று, 1953ஆம் ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் (சாஸ்திரி மஹாலில்) மகாவித்துவான் தண்டபாணி தேசிகர் எழுதிய 'திருக்குறள் உரைவள' வெளியீட்டுவிழா. பேராசிரியர் மு.வ., பேராசிரியர் சேதுப்பிள்ளை, பேராசிரியர் தெ.பொ.மீ.-மூன்று தமிழ்ச்சான்றோர்களும் ஒருங்குகூடி தேசிகர் உரைவளத்தைப் பாராட்டும் தமிழ்விழா. சிதம்பரம் கீழ மூங்கிலடி, காந்த ஆசிரமத்தில் காந்தீய ஆதாரக்கல்வி ஆசிரியப் பயிற்சியாள னாகப் பயின்று கொண்டிருந்த என்னைப் பயிற்சிப் பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. ம.ரா. பாலகணபதி (இளங்கணத்தான்) வேறு பல மாணவர்களோடு அவ்விழாவிற்கு அழைத்துச் சென்றார். அந்த நாள்தான் முதன்முதல் மு.வ.வின் தண்ணருள் எனக்கு வாய்த்த நாள்.

விழா முடிந்து அறிஞர் சிலர் மாணவர் பலர் சான்றோர் மூவரையும் சூழ்ந்துகொண்டு உசாவினர்; உரையாடி மகிழ்ந்தனர். அகலாது அணுகாது நான் மு.வ.வையே நோக்கிக் கொண்டிருந்தேன். என் 'நோக்கு முகை மொக்குள்' உள்ள மனக் குறிப்பை ஒருவாறு உணர்ந்த மு.வ. என்னை அருகில் அழைத்து, 'ஏதேனும் பேச வேண்டுமா?' என்றார் 'அம்' என்று தலையசைத்து 'நான் கீழமூங்கிலடி ஆதாரக்கல்வி ஆசிரியக் கல்விப் பயிற்சி பெறும் மாணவன். தங்கள் புதினம் அல்லியால், அறிமுகம் பெற்றவன். தங்களிடம் தமிழ் கற்க விழைகிறேன்' என்று கூறி ஏக்கத்தோடு அவரையே நோக்கி நின்றேன்.

அப்படி யான் நோக்கி நின்ற காலை என்னைத் தான் நோக்கித் தமக்கே உரிய சிறு நல்நகையோடு “திருக்குறள் ஆயிரத்து முந்நூற்று முப்பதும் கற்றுள்ளாயா?” என்று கேட்டார். பத்துப் பதினைந்து அதிகாரங்கள் மனப்பாடம், ஆனால் முழுதும் கற்க வில்லை என்று நாணத்துடன் தலைகவிழ்ந்து கொண்டு சொன்னேன். 'முழுவதும் கற்றபின் எனக்கு எழுது' என்று ஒரு வானொலி கேட்டது. பிரிந்தோம். பின், ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளும் பாயிரத்தோடு பயின்றபின் 1955-இல் சென்னை செல்லம்மாள் தெரு 'தாயக' இல்லத்து மொட்டை மாடியில் கூடினோம். கலந்தோம். தமிழ் பற்றி, தமிழ் இலக்கியங்கள் பற்றி, தமிழர் நிலை பற்றிப் பல்லாண்டு எண்ணினோம். அவர் சொல்லச் சொல்ல நான் எழுதினேன். இது குறள் என் வாழ்வில் ஏற்படுத்திய முதல் பாதிப்பு.

அடுத்தது, திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத் துணைவேந்தர் அறை. அவர் மேற்கு நோக்கியவாறு அமர்ந்து உள்ளார். வடக்கு நோக்கியவாறு பேராசிரியர் மு. வரதராசன், பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், திருமலையை நோக்கியவாறு அமர்ந்துள்ளனர். தெற்கு நோக்கிப் பேராசிரியர் துரை அரங்கனார், பதிவாளர் அமர்ந்துள்ளனர்.

1971, என் விரிவுரையாளர் நேர்முகத் தேர்வு. துணைவேந்தர் டாக்டர் ஜெகந்நாத ரெட்டியார், “தம்பி' நீங்கள் கவிதை எல்லாம் எழுதுவதாகத் தங்கள் பயோடேட்டாவில் எழுதியிருக்கீங்க. எங்கே உங்கள் பேராசிரியர் பற்றி ஒரு குறள் வெண்பா எழுதுங்கள்'' என்று என்னை நோக்கித் தனக்கு இடப்பக்கம் பேராசிரியர் சுப்புரெட்டியார்க்கு அருகில் அமர்ந்திருந்த பேராசிரியர் மு.வ.வைச் சுட்டிக்காட்டினார். மு.வ. தமக்கே உரிய அடக்கத்தோடு 'வேண்டா வேண்டா' அதோ எழுகிறானே அந்தக் கதிரவனை நோக்கி ஒரு குறள் எழுதட்டும் என்று துணைவேந்தர் தலைக்குமேல் சுவரில் அமைக்கப் பெற்றிருந்த கண்ணாடிச் சன்னல் வழியே தெரியும் கதிரவனைக் காட்டினார். நான் அப்படியே எழுதித் துணைவேந்தர் முன் பணிவோடு தந்தேன். அவர் பேராசிரியர் துரை. அரங்கனாரிடம் தருமாறு கைகாட்டிக் குறித்தார். பேராசிரியர் துரையரங்கனார் தமக்கே உரிய இறுகிய புன்னகையோடு 'சரியாக இருக்கிறது' என்பது போல் மெல்லத் தலையசைத்தார். இந்த இரு நினைவுகள் அறக்கட்டளைச் சொற் பொழிவு ஆற்ற வந்துள்ள என்னையும் அறக்கட்டளைக்கு உரிய பேராசிரியர் மு.வ. அவர்களையும் பிணைத்தன; பழையன மிகப் பழையன.

பின்னிரண்டு நினைவுகள் அண்மையன. சென்றாண்டு நவம்பர் மாதம் தமிழ் வளர்ச்சி இயக்குநர் டாக்டர் இராசேந்திரன் அவர்கள் திராவிடப் பல்கலைக்கழகத்தில் கல்விப் புலப் பொறுப்பில் இருந்த என்னிடம் தொலைபேசியில் பேசி திருக்குறள் திருவள்ளுவர் பற்றிய என் பணிபற்றிக் கேட்டிருந் தார்கள். இரண்டு குழந்தைக் கவிதைகள் ஒன்று திருவள்ளுவர் பற்றியது, மற்றொன்று திருக்குறள் பற்றியது. சில ஆராய்ச்சிக் கட்டுரைகள், திருக்குறள் உலகளாவிய மாநாட்டில் கலந்து கொண்டமை பற்றிய செய்திகள் சிலவற்றை அவர்க்கு அனுப்பி வைத்தேன். 'ஐயோ! குறள் பற்றி, பேராசிரியர் என் வாழ்வின் தொடக்கத்தில் உணர்த்திய குறள்பற்றி, முழுமையான, திறமான ஒரு நூல் எழுதாது போய்விட்டோமே' என்ற ஏக்கத்தை அது ஏற்படுத்தியது. அந்த ஏக்கம் சென்ற ஆண்டு முழுதும் என் நெஞ்சில் நின்று உறுத்திக் கொண்டே இருந்தது. இது குறள் பற்றிய மூன்றாவது பாதிப்பு.

நான்காவது 12-3-2004ஆம் நாள் அன்று உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களிடமிருந்து டாக்டர் மு. வரதராசனார் அறக்கட்டளைப் பொழிவுக்கான அழைப்புக்கு இன்று எழுத்துருவம் பெற்று விளங்கும் 'திருக்குறளில் பொதுநிலை உத்திகள்' என்னும் தலைப்பில் நிகழும் அறக்கட்டளைச் சொற்பொழிவு.

இந்நான்கு திருக்குறள் நினைவுகளுக்கும் என் தமிழ் வாழ்வுக்கும் தந்தையான அப்பா மு.வ. அவர்களை இன்று அவர் நின்று பழகிய இந்த மேடையிலிருந்து முதலில் நன்றி கூறுகிறேன்.

இந்த வாய்ப்பினை எனக்கு அளித்தருளிய வல்லுநர் குழுவுக்கும், இயக்குநர் திரு. சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும் என் இதயம் நிறைந்த நன்றி. அறக்கட்டளைப் பொழிவுப் பொறுப்பாளர் டாக்டர் சிவகாமி அம்மையார்க்கு என் நன்றி.

என் கையெழுத்துரு அவ்வளவு தெளிவாக இல்லை. கையெழுத்து தெளிவாக எழுதவல்ல திருவேங்கடவன் பல்கலைக் கழக முதுகலை முதலாம் ஆண்டு மாணவர் சி. செல்வம் அவர்கள் அவ்வகையில் உதவினார்கள். அவருக்கு என் நன்றியும் வாழ்த்தும். கிருஷ்ணகிரி அரசினர் கலைக்கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் டாக்டர் ந. பழனிவேலு, என் மாணவரிடம் கையெழுத்துருவை ஒருமுறை காட்டினேன். அங்கும் இங்கும் சில திருத்தங்கள் சொன்னார்; அவர்க்கு என் நன்றி உரியதாகும். மெய்ப்புத் திருத்தியுதவிய செல்வி ரா. ராஜேஸ்வரிக்கும் நன்றி.

திருப்பதி

பொன். சௌரிராசன்

# உள்ளுறை

# வான்புகழ் வள்ளுவம்

தமிழைப் பாரதியார் நினைக்கும்போதெல்லாம் அவர் நெஞ்சில் மூன்று புலவர்கள் தொடர்ந்து நின்று விளங்குகிறார்கள்.

செம்மொழியாகிய தமிழ் 'முன்னைப் பழமைக்கும் முன்னைப் பழமையதாய்ப் பின்னைப் புதுமைக்கும் பெயர்த்தும் அப்பெற்றியதாய்' விளங்கும் பாங்கு பற்றிப் பாரதி அவ்வாறு எண்ணிப்பாடி இருக்கலாம். அப்படி எண்ணிப் பாடும் போதெல்லாம் கம்பர், வள்ளுவர், இளங்கோ மூவரையே முன்னிறுத்திப் பாடுகிறார்.

அவர் இவ்வாறு மூவரை மட்டும் எண்ணிப்பாடுவதற்கு என்ன காரணம் இருக்கக் கூடும்? சங்க இலக்கியம் அகப்புறப் பொருளில் பல்லாயிரம் பாடல்கள் கொண்டது. அவை தமிழர் காதல், வீரம், பண்பாடு இவை மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்த நிலையை எடுத்து உரைப்பன. அவற்றின் பாங்கு பல, சிலப்பதிகாரத்தில் அமைந்துள்ளன. பன்னிரு ஆழ்வார், நாயன்மார் நால்வர் பாடிய பக்திப் பாடல் பாங்குகள் கம்பர் காவியத்திற்கு ஊற்றாக அமைந்துள்ளன. "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற உலகப் பொதுமை திருவள்ளுவர் குறளுக்கு அடிப்படையாய் அமைந்து உள்ளது. எனவே தற்காலத் தமிழன் பல்லாயிரம் சங்கப் பாடல்களைப் படிக்காமல் போயினும் பல்லாயிரம் பக்திப் பாசுரங்களையும், தேவராத்திருப்பதிகங் களையும் பயிலாது போயினும், உலகப் பொதுமையை உணராது போயினும், இம்மூவர் நூல்களைக் கற்பின் தமிழ் மொழிப் புலமையை, தமிழ் இலக்கியப் பாங்கை, தமிழ்க் காப்பிய அமைதியை, தமிழ்ப் பண்பாட்டை உணர்ந்து உய்வர் என எண்ணி இம்மூவரையும் தமிழர்க்கு அறிமுகப்படுத்தி இருக்கலாம்.

இன்னொரு காரணம், தமிழர் தம்மை, தம் பண்பாட்டை மறவாமல் தமிழர்களாகவும் அதே நேரத்தில் உலக மானுடத்தை உணர்ந்த ஓர் உலகக் குடிமகனாகவும் வாழ்வாங்கு வாழ்வதற் காகவும் இருக்கலாம்.

இதனால்தான் 'தமிழ்' என்ற தன் பாடலில்

"யாமறிந்த பலவரிலே கம்பனைப் போல்
வள்ளுவர்போல், இளங்கோவைப் போல்
பூமிதனில் யாங்கணும் பிறந்ததில்லை,
உண்மை, வெறும் புகழ்ச்சி யில்லை
ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்
வாழ்கின்றோம்'.......

என்பதால்தான் போலும் (பாரதியார் பாடல்கள், தமிழ்நாடு, பக். 168) தமிழர்கள் கற்று, கேட்டுப் பாடிப் பேசி பழகுதற்கு உரிய, சிறந்த நூல்கள் இயற்றிய முப்பெரும் புலவர்களை அறிமுகப் படுத்துகிறார்.

'தமிழ்ச் சாதி' என்ற இன்னொரு பாடலில் தமிழ்ச்சாதி என்றும் அமரதன்மை கொண்டு வாழும், அதற்குக் காரணம்

"சிலப்பதிகாரச் செய்யுள்..............
திருக்குறள் உறுதியும் தெளிவும் பொருளின்
ஆழமும் விரிவும் அழகும் ...........
'எல்லையொன்றின்மை' எனும் பொருள் அதனைக்
கம்பன் குறிகளால் காட்டிட முயலும்
முயற்சி......" (பாரதியார் பாடல்கள் ப. 171)

எனக் காட்டுகிறார்.

'செந்தமிழ் நாடு' என்னும் தம் பாடலில் கம்பனால் கல்வி சிறந்ததையும், சிலப்பதிகாரத்தால், தமிழ் சீர்மையுற்றதையும் உணர்த்தித் திருவள்ளுவரால் தமிழ் உலகத்தமிழ் ஆகியது என்று தம் அனுபவத்தில் கூறுகிறார்.

கல்வி சிறந்த தமிழ்நாடு - உயர்
கம்பர் பிறந்த தமிழ்நாடு
..............................................................
.......................................................... நெஞ்சை
அள்ளும் சிலப்பதிகாரம் என்றோர்மணி
யாரம் படைத்த தமிழ்நாடு ...........................

என்று பாடும் பாரதியார் - திருக்குறளை நினைந்தபோது

'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு'
(பாரதியார் பாடல்கள், ப. 166)

என்று திருவள்ளுவரின் உலகளாவிய பொதுமைச் சிந்தனையை எடுத்துரைக்கிறார்.

"எல்லார்க்கும் எல்லாம் என்றிருப்பதான
இடம்நோக்கி நடக்கும் இவ்வுலகை"

எண்ணி வள்ளுவர் இயற்றிய குறளின் பொதுமைச் சிறப்பை உணர்த்த விழைந்த மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளை எதிர்மறை முகமாக,

'வள்ளுவர்செய் திருக்குறளை மறுவற நன்குணர்ந்தோர்
உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்துக்கு ஒருநீதி'

என்றுரைப்பர்.

பரிமேலழகர் தம் திருக்குறள் உரைப்பாயிரத்தில்,

"வழக்கும் தண்டமும் உலகநெறி நிறுத்துதற் பயத்தவாவ தல்லது ஒழுக்கம் போல மக்கள் உயிர்க்கு உறுதி பயத்தற் சிறப்பில வாதலானும், அவைதாம் நூலானேயன்றி யுணர்வு மிகுதியானும் தேகவியற்கையானும் அறியப்படுதலானும், அவற்றை ஒழித்து ஈண்டுத் தெய்வப் புலமைத் திருவள்ளுவரால் சிறப்புடைய ஒழுக்கமே அறமென எடுத்துக்கொள்ளப்பட்டது.

அதுதான் நால்வகை நிலைத்தால் வருணந்தோறும் வேறுபாடுடைமையின், சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்கள் ஒழித்து எல்லார்க்கும் ஒத்தலிற் பெரும்பான்மையாகிய பொது வியல்பு பற்றி இல்லறந் துறவறம் என இருவகை நிலையாற் கூறப் பட்டது" (திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும், ப. 3, மதுரைப் பல்கலைக்கழகம், 1972).

திருவள்ளுவ மாலையில் காணப்பெறும் ஐம்பத்துமூன்று பாடல்கள் திருக்குறளின் பல்வேறு சிறப்புகளை, ஒப்புமை, உறழ்ச்சி, உண்மைநிலை விளக்கம் என முப்பாங்கில் எடுத்துரைக் கின்றன. உண்மை நிலை விளக்கமாக அமைந்த பாடல் சில திருக்குறளின், திருவள்ளுவரின் கால, இடம் கடந்த கருத்துப் பொதுமையை எடுத்துரைப்பனவாய் அமைந்துள்ளன.

கால இட நிகழ்ச்சிகளுக்கு ஏற்பச் சமுதாய நியதி பல உருவாக்கப்பெறும். அவற்றுள் பல மாறுபடும். கால, இட, நிகழ்ச்சிகளுக்கு ஒவ்வாதனவாய் அமைந்து விடுவதுண்டு. குளிர் நாட்டுக்குரிய ஆடை, அணி, உணவு, உறைவிடம், புறஒழுக்கம் பல வெப்ப நாடுகளுக்கு ஒவ்வா. அறிவியல் வளராத அந்த

நாட்கள் போக்குவரத்து அறிவியல் வளர்ந்த இந்த நாட்கள் போக்குவரத்திலிருந்து பெரிதும் பின் தங்கியிருந்தது. இப்படியே திருமணம், அரசு விழா, இசை, நடனம் முதலிய நிகழ்ச்சிகளிலும் எவ்வளவோ வேறுபாடுகள் தோன்றியுள. இவையெல்லாம் புறமாக மேற்போக்காக அமைந்த வாழ்க்கை முறை. இவை ஆண்டுக்கு ஆண்டு ஏன் மாதத்திற்கு மாதம்கூட மாறுபடுதல் உண்டு. ஆனால் வாழ்க்கையின் அடிப்படை உண்மைகள் காலம், இடம் நிகழ்வுகள் கடந்து என்றும் வாழ்வன; வாழ்விப்பன.

இறையனார் பாடியதாகத் திருவள்ளுவ மாலையில் அமைந்துள்ள மூன்றாம் பாடல் வள்ளுவன் வாய்ச்சொல்லின் இந்தச் சிறப்பைப் பின்வருமாறு பாராட்டிப் பாடுகிறது.

> "என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும்
> நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையது"

திருக்குறள் உலகப் பொது நூல் என்பதனை உறுதி செய்யும் திருவள்ளுவமாலைப் பாடல் பல.

> "வள்ளுவரும் தம்குறள்வெண் பாவடியால் வையத்துள்
> உள்ளுவஎல் லாம் அளந்தார் ஓர்ந்து"

எனப் பரணரும்,

> ....................... வள்ளுவனார்
> சுரந்தபா வையத் துணை"

என மதுரைத் தமிழ் நாகனாரும்,

> இன்பமும் துன்பமும் என்னும் இவையிரண்டும்
> மன்பதைக் கெல்லாம் மனமகிழ - அன்பொழியா(து)
> உள்ளி யுணர உரைத்தாரே.

என மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனாரும்

> "வள்ளுவனார் ஏற்றினார் வையத்து வாழ்வார்கள்
> உள்ளிருள் நீக்கும் விளக்கு

என நப்பாலத்தனாரும்,

> வள்ளுவர் இன்குறள் வெண்பா அகிலத்தோர்
> உள்ளிருள் நீக்கும் ஒளி

என மதுரைப் பாலாசிரியனாரும்

> ............. உலகடைய உண்ணுமால்
> வண்டமிழின் முப்பால் மகிழ்ந்து"

என ஆலங்குடி வங்கனாரும்

திருக்குறள் உலகளாவிய மானுட வாழ்வை அடிப் படையாகக் கொண்ட ஒரு திருநூல் என எடுத்துரைக்கின்றனர்.

உலகாயதம், புத்தம், சமணம், மீமாம்சை, பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம் எனச் சமயங்கள் இந்தியச் சமயச் சான்றோர் களால் அறுவகையாக கருதப்பெற்றது. அந்த அறுவகை சமயத் தாரும் ஒருவர் கருத்தோடு மற்றவர் ஒன்று படார்; மாறுபட்டுத் தங்கள் கடவுட் கொள்கையை, உயிர்க் கொள்கையை, வீடுப் பேற்றுக் கொள்கையை நிலைநாட்டுவர். அத்தகு வேறுபடும் ஆறு சமயத்தவர்களும் ஒத்துக் கொள்ளுமாறு இறை உண்மையை, வாழ்வியல் உண்மைகளை வள்ளுவர் வகுத்துத் தந்துள்ளார் எனத் திருவள்ளுவமாலை ஒன்பதாம் பாடல் உரைக்கின்றது.

ஒன்றே பொருளெனின் வேறென்ப; வேறனின்
ஒன்றென்ப ஆறு சமயத்தார் - நன்றென
எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி.

இந்த இந்திய நாட்டுச் சமயங்கள் மட்டும் அல்ல இசுலாம், கிறித்துவம் முதலான பிற சமயத்தவர்களும் ஒப்புமாறு அடிப் படை இறைச் சிந்தனையை, உலகுக்கு அருளியவர் என்பதனைக் கல்லாடம் பாடிய கல்லாடனார்,

"சமயக் கணக்கர் மதிவழி கூறாது
உலகியல் கூறிப் பொருள்இது என்ற
வள்ளுவன்"

எனக் கூறுவர்.

"திருவள்ளுவர் நூல் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற முப்பாலால் ஆக்கப்பட்டது. அறமும், பொருளும், காதலும் ஒரு வகுப்பார்க்கோ, ஒரு மதத்தார்க்கோ, ஒரு நிறத்தார்க்கோ, ஒரு மொழியார்க்கோ, ஒரு நாட்டார்க்கோ உரியன அல்ல, அவை மனப்தைக்கு, உலகுக்குப் பொது.

(திரு.வி.க. திருவள்ளுவர் அல்லது
வாழ்க்கை விளக்கம், 'முன்', ப. 14).

**"காலம் மாறினும் உண்மைகள் மாறுவதில்லை. காலத்தின் மாறுதல்கள் உடையின் மாறுதல்கள் போன்றன.** அடிப்படை உண்மைகள் உயிர் போன்றன, திருவள்ளுவர் வாழ்க்கையின் அடிப்படையாகவும் பொதுவாகவும் உள்ள உண்மைகளைக் கண்டு எழுதியுள்ளமையால் பல்வேறு

காலத்தவரும் அவற்றைப் போற்ற முடிகின்றது. அவ்வாறு போற்றும்போது தம்தம் காலத்திற்கு ஏற்றவாறு அவற்றை உணர்கின்றனர்.

......... திருக்குறளை இவ்வாறு போற்றிக் கற்க கற்க திருவள்ளுவர் என்னும் தமிழ்ச் சான்றோர் முன்வந்து வழிகாட்டக் காண்கிறோம். (மு. வரதராசன், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், பக். 31, 32).

"குலம், கோத்திரம், இனம், சாதி இவை கடந்து மனித இனம் அனைத்துக்கும் பொதுவான கருத்துக்களையே வள்ளுவர் கூறுகிறார்" என்பது பேராசிரியர் எம். விண்டர் ரூட்ஸின் (M. Winter Rutzin), டயிள்யூ.எச். ட்ருவ் (W.H. Drew), எம். ஏரியல் (M. Ariel) முதலியோர் துணிபாகும்.

> "திருவள்ளுவர் இனம், சாதி, வகுப்பு எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டவர். அவர் அறிவுறுத்துவன மனித சாதிக்கு ஒழுக்கமும் அறிவுமாகும்"
>
> Prof. M. Winter Rutzin

> "ஆசிரியர் (திருவள்ளுவர்) குறிப்பிட்ட சில வகுப்புக்கே உரியவற்றை விட்டுவிட்டு யாவருக்கும் பொதுவான கருத்துக்களையே சொல்கிறார்"
>
> Rev. W.H. Drew

> 'குறளின் ஆசிரியர் சாதி, பல்வேறு மக்கள் நம்பிக்கைகள் ஆகியவற்றை எண்ணாமல் மனித சாதி அத்தனைக்கும் பொதுவாகச் சொல்கிறார் என்பது வியப்புக்குரியது"
>
> M. Ariel, திருக்குறள் ஆராய்ச்சி
> பதிப்பு உரை, ப. 12.

### பொதுநிலை

நான் அடிக்கடி இளங்கோவையும் திருவள்ளுவரையும் பல நோக்குகளில் ஒருங்கு வைத்து ஒப்பிட்டும் உறழ்ந்தும் எண்ணிப்பார்ப்பேன். அப்படிப் பார்க்கும்போது அவ்விருவரும் இயற்றிய நூல்களில் அமைந்துள்ள ஒரு தலையாய வேறுபாடு எனக்குப் புலப்படும். அவ்வேறுபாடு அவ்விருவர்தம் நோக்குகளை அடிப்படையாகக் கொண்டது. பல்வேறுபட்ட அரசுப் பரம்பரை; சிற்றரசர் குடிகள், இவற்றிற்கு இடையே

மூன்று அரசாக, ஏழு வேளிர்குடிகளாகப் பிரிந்திருந்த தமிழ் நாட்டை ஒன்றுபடுத்தி ஒரு தமிழ்நாடாக உருவாக்கும் நோக்கம் இளங்கோ வுடையது. அவர் காலத்தில் மறைந்து கொண்டிருந்த மறக்கடிக்கப்பட்டுக் கொண்டிருந்த தமிழ்மொழியை, தமிழ்க் கூத்தை, தமிழ் இசையை, தமிழ்ப் பண்பாட்டை, தமிழ் நாட்டுப் புறக் கதையைச் சிறப்பாகத் தமிழரை வாழ்விக்க வேண்டும் என்பது அவர் குறிக்கோள். அவர் அரசைத் துறந்தார், ஆனால், தமிழை, தமிழரை, தமிழ்க்கலையை, தமிழ் மண்ணை மறக்காமல் ஆங்காங்கே நினைவுகூர்கிறார்.

ஆனால் திருவள்ளுவரோ ஓர் இல்லறத்தார்; இந்தத் தமிழ்மண்ணில் தமிழ்ப் பண்பாட்டில், தமிழ் மக்களோடு வாழ்ந்த ஓர் இல்லறத்தார்; துறவி அல்லர். ஆனால், அவர் தன்னைத் துறந்து, தன் மண்ணைத் துறந்து, தன் மொழியைத் துறந்து, உலகை நினைத்தவராகத் திருக்குறளைப் படைத்துள்ளார். சிலம்பில் இடம்பெறுவதுபோல புகார், மதுரை, வஞ்சி என்னும் ஊர்கள் குறளில் இடம்பெறவில்லை. சேரன், சோழன், பாண்டியன் இடம்பெறவில்லை. காவிரி, வையை இடம்பெற வில்லை. தன் நூல் வழித் தான் யார் என்று காட்டிக் கொள்ளாமல் தன் தனி வாழ்வை மொழியாலோ, குடியாலோ, சமயத்தாலோ காட்டிக் கொள்ளாமல் காலம், இடம் கடந்து நூலை யாத்திருப்பதும் ஒரு பொதுநிலை உத்தியே ஆகும்.

> எல்லா நாட்டினரும் எல்லாச் சமயத்தினரும்
> எல்லா மொழியினரும் எல்லா இனத்தினரும்
> மேற் கொள்ளக்கூடிய அறங்களையே திருக்
> குறள் பேசுகிறது - எல்லாச் சமயங்களின்
> பேரறங்களையும், திருக்குறளில் காணலாம்.

(S. இராஜு செட்டியார்,
திருக்குறள் ஆராய்ச்சிக் கட்டுரைகள்,
பகுதி - 2, ப. ix, கம்பன் பதிப்பகம், சென்னை, 1985)

அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது. இந்த அரிய பிறவியின் நோக்கு இரண்டு. ஒன்று இறைநிலை தெளிதல்; மற்றொன்று அறநெறி நிற்றல் என்பதாகும். இந்த இரு நோக்கும் நிறைவேற உலகில் இறை, அறநெறிச் சான்றோர் பலர் தோன்றினர்; சமயங்களும் பல தோன்றின. கால, இடச்சூழல் களுக்கு ஏற்ப அவை உணர்த்தும் புற வாழ்வுப் படிகள் பல; அக அறக்கோட்பாடுகள் சில. இந்த அக அறக்கோட்பாடுகள் அங்கிங் கெனாதபடி, அக்காலம், இக்காலம், பிற்காலம் என்னாதபடி

எங்கும் என்றும் ஒன்றாக அமைந்தன. இவை ஆழ்கடலில் அமைதியாக நிற்கும் நீர் போன்றது; சமயப் புற வாழ்வுப்படிகள் கடல்மேல் தவழும் அலைகள் போன்றவை. அவை ஏறும், இறங்கும், நீளும், குறுகும்; எழும், விழும், மொழி, இனம், கலை, வாழும் நாடு, சூழும் பண்பாடு இவற்றால் மக்கள் மாறு பட்டாலும்; மக்கள் வாழ்க்கைப் போக்கு மாறுபட்டாலும் அவர்கள் வாழ்வில் சில அடிப்படை அறங்கள் எந்த வேறுபாடும் இன்றி அமைந்திருத்தல் கண்கூடு. அந்த அடிப்படை அறங் களையே திருவள்ளுவர் உரைப்பதால் அவை எல்லாம் எல்லாச் சமய அடிப்படை அறங்களோடு பெரிதும் ஒத்துப் போவதால் எச்சமயத்தவர்க்கும் உரிய பொது நூலாக இது அமைக்கப் பெற்றிருப்பது திருவள்ளுவர் பொது உத்திகளுள் ஒன்று.

சொல் வளமும், பொருள் நோக்கும் கொண்ட புலவர்கள் எத்தனை எத்தனையோ உத்திகளைப் பயன்படுத்தி இனிமை யையும் அழகையும் தம் படைப்பிற்கு ஊட்டியுள்ளனர். தொல் காப்பியர் முதலான கீழை நாட்டு அறிஞர்களும் பிளேட்டோ முதலான மேனாட்டு அறிஞர்களும் உத்தி பலவற்றின்வழி சொல்லின்பமும் பொருள் இன்பமும் சிறந்து புலப்படுமாற்றை எடுத்துரைத்துள்ளனர். எனினும் அத்திறனாய்வாளர் கண்ட உத்திகளுக்கு மேலும்கூட உணர்ச்சிக் கூர்மையும் கற்பனைத் திறமும் மொழியாற்றலும் உடைய புலவர் பலர் தம் படைப்பில் புதுப்புது உத்திகளைக் கையாண்டு கற்போருக்குக் களிமகிழ் வூட்டி வருகின்றனர்.

> ஒளிவிடும் சாதுரியம், நகைச்சுவை, அழுத்தமாகச் சொல்லுதல், கற்பனை, முரண்பாட்டு நயம், வினாதல், ஓவியம் போன்ற உவமைகள் - இப்படிக் கருவிலே திருவுடைய கலைஞன் ஆளும் ஆயிரம் உத்திகளில் ஒன்றையும் அவர் (திருவள்ளுவர்) இந்த முழுமையான கலைப்படைப்பில் (திருக்குறளில்) ஆளாமல் விட்டுவிட வில்லை"

(The Kural or Maxim of Thiruvalluvar,
Translated by V.V.S. Iyer)

"எந்தக் கலைஞனும் தான் கூற வந்த செய்தியினை ஆற்றலுடன் வெளிப்படுத்தப் பயன்படுத்தும் வெளியீட்டு நெறி முறைகளே 'உத்தி' எனக்கொள்ளப் பெறுகின்றது. உத்தி என்பது கலை ஆக்கமுறை. பாடுபொருளுக்கு ஏற்ப வடிவம் அமைவது போல், வடிவில் பயிலும் உத்திகளும் வேறுபட வாய்ப்புண்டு. எனவே, இந்த அடிப்படையில் உத்திகளை மூவகைப் பகுப்பில் பிரித்து நோக்கலாம்.

1. பொதுநிலை உத்தி
2. சிறப்புநிலை உத்தி
3. தனிநிலை உத்தி

பொதுநிலை உத்தி நடை, சொல்லாட்சி, ஒலிநயம் போன்றவற்றாலும்; உருவகம், உவமை, மறை பொருள் முதலான அணி வகைகளாலும் வெளிப்படுத்தப்படும்" (டாக்டர் தி. லீலாவதி, திருக்குறள் ஆய்வும் மதிப்பீடும், ப. 270)

இங்குப் பொதுநிலை உத்தி எனக் கூறப்பெற்றது கவிஞர் எல்லோரும் கையாளும் அணிகளே. ஆனால், திருவள்ளுவர் தம் திருக்குறள் படைப்பில் பொதுநிலை உத்தி என்பதன் பொருள் வேறு. தம் இறை பற்றிய, காமம் பற்றிய கருத்துக்கள், கால, இட எல்லை கடந்து அனைவராலும் அனைத்துக் காலத்துக்கும் ஏற்குமாறு அமைய, தாம் தமக்கே என அமைத்துக் கொண்ட ஒரு பொதுநிலை நோக்கு ஆகும். இதை எப்படி எப்படிச் சொன்னால் எல்லாக் காலத்தவர்க்கும், எந்நாட்டவர்க்கும் ஒத்ததாக அமையும். கால, இடங்களுக்கு ஏற்ப மாற்றமுறும் கூறுகள் யாவை. அவற்றை நீக்கும் வழி, பொதுத் தன்மையைத் தம் கருத்துக்கு எப்படி நிலைநாட்ட முடியும் என்றெண்ணி, அப்படித் திருவள்ளுவர் பாடியிருப்பதையே திருவள்ளுவரின் பொதுநிலை உத்தி என்று இங்குக் கருதப்பெறுகிறது. எடுத்துக் காட்டாக,

> மனு கூறும் அரசர் மண்டலம் முழுவதையும்
> தன் ஆதிக்கத்தின் கீழக் கொண்டு வருவதற்காகப்
> போர் செய்வதையே பெரும்பாலும் தன்
> கடமையாகக் கொண்டிருக்க வேண்டியராவார்.
> ஆனால் குறள் விவரிக்கும் அரசர் பகைமையை
> விரும்பாத, 'பகை நட்பாக் கொண்டொழுகும்
> பண்புடையாளன்' குறள், 874.
>
> (டாக்டர் கோ. சுப்பிரமணியன்,
> வள்ளுவர் வகுத்த அரசியல், ப. 105)

மண்ணாசை கொண்டு போரிடும் வஞ்சிப் போரும் வள்ளுவர் காலத்தில் தமிழகத்தில் நிலவியது. பெண்ணாசை கொண்டு பாரியின் பறம்பை மூவேந்தர் முற்றியிருந்த செய்தியைப் புறநானூறு புகலும்.

இத்தகு மண்ணாசை, பெண்ணாசை கொண்டு போரிட்ட செய்தி எதுவும் தம் நூலில் இடம்பெறாது ஒதுக்கிப் பாடியுள்ள பாங்கே திருவள்ளுவரின் பொதுநிலை உத்தி என இங்குக் கருதப்பெறல் வேண்டும்.

ஒரு பொருளை எப்படி நோக்குதல் வேண்டும், ஆய்தல் வேண்டும், வெளியிடல் வேண்டும் என்னும் வகையில் உலகப் பொதுக் கருதுகோள், எடுகோள்களைத் திருவள்ளுவர் தம் குறளில் உருவாக்கியுள்ளார். என்பது பின்வரும் குறள்களால் புலப்படும்.

'சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்து' *(118)*

'எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு' *(385)*

'எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு' *(423)*

'நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல் *(948)*

இக்குறள்கள் கூறுவோன், கூறும்பொருள், கூறும் நெறி, இவை எவ்வாறு நடுநிலையாக, என்றும் எங்கும் நிலைத்த உண்மையானதாக, அறிவியல் நெறியில் அமைவதாக இருத்தல் வேண்டும் என்று தெளிவு செய்கின்றன.

இவ்வாறு, ஆய்வில் நடுநிலையும் பொதுநோக்கும் அமைய வேண்டும் என்று கருதும் திருவள்ளுவர் தம் கருத்துக்களை ஒரு பொதுநிலைக் கோட்பாட்டில் கூறியிருத்தல் இயற்கையே அல்லவா?

எப்பொழுதும், எங்கும், எல்லோருக்கும் பொருந்தும் இயற்கைப் பொருள்களை, நிகழ்ச்சிகளை, உவமையாக்கி உண்மைகளை உணர்த்தியமை; எல்லோருக்கும் அனுபவமான வாழ்க்கை அனுபவங்களைக் காட்டி உண்மைகளை உணர்த்தியது; ஊர், பேர், புற ஆடை, அணி முதலியன தம் நூலில் இடம் பெறாது காத்துக்கொண்டது; கால, இடச் சூழல்களின் செல்வாக்குக்கு அப்பால் நின்று தாம் சொல்லப் புகுந்த கடவுள், வழிபாடு, அறம், பொருள், அரசு, இன்பம் முதலியவற்றைப் பெரும்பாலும் உரைத்தது. இவை எல்லாம் திருவள்ளுவர்தம் பொதுநிலை உத்திகளாக இங்கு இனங்காணப்பெறுகிறது.

பொதுவாக எல்லாக் கவிஞர்களும் மேற்கொள்ளும் அணி நடை முதலிய படைப்பாக்கப் பொதுநிலை உத்தி வேறு இங்குக் கூறப்பெறும் 'பொது நிலை உத்தி' வேறு என்பதை முதலில் மனத்தில் இருத்திக் கொள்ளல் வேண்டும்.

# வாழ்வியல் அனுபவங்கள்

இறை, அறம், பொருள், இன்பம் பற்றித் தாம் தெளிந்த பல வாழ்வியல் உண்மைகளை, உணர்வுகளை, செயற்பாடுகளைப் பற்றி உலகத்தவர் தத்தம் வாழ்வில் பட்டுகண்ட அனுபவங்கள் வழி திருவள்ளுவர் அறிவுறுத்துகிறார். உலகத்தவர் அனைவரும் பட்டுணர்ந்த அனுபவங்களை எடுத்துக்காட்டாகக் கொள்வதன் வழி திருவள்ளுவர் மேற்கொண்ட பொதுநிலை உத்தி புலப் படுகிறது.

அவ்வாறு தம் காலத்து வாழ்ந்தவர், வாழ்கின்றவர், இனி வாழப்போகின்றவர் அனைவர்க்கும் ஒத்த அனுபவங்களைத் திருவள்ளுவர் எடுத்துக்காட்டாகக் கொண்டவை கீழ்வருவன:

| | |
|---|---|
| அகரமுதல எழுத்தெல்லாம் | 1 |
| கோளில் பொறியில் குணம்இலவே | 19 |
| நீரின்றி அமையாது உலகு | 20 |
| வையத்து இறந்தாரை எண்ணிக் கொண்டற்று | 22 |
| குணம் என்னும் குன்று | 29 |
| குழல்இனிது யாழ்இனிது என்பர் | 66 |
| வையகமும் வானகமும் ஆற்றல் அரிது | 101 |
| ஞாலத்தின் மாணப் பெரிது | 102 |
| நன்மை கடலின் பெரிது | 103 |
| மலையினும் மாணப் பெரிது | 124 |
| தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் | 249 |
| பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை | 242 |
| பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை | 247 |
| பெற்றம் புலித்தோள் போர்த்து மேய்த்தற்று | 273 |
| படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றுஊக்காது | 253 |
| அளவறிந்தான் நெஞ்சத்து அறம்போல் நிற்கும் | 280 |
| சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி | 306 |
| கூத்தாட்டு அவைக்குழாத்து அற்றே | 332 |

பொருள்என்னும் பொய்யா விளக்கம் 753
குன்றேறி யானைப்போர் கண்டற்றால் 758
நவில்தொறும் நூல்நயம் போலும் 783
உடுக்கை இழந்தவன் கைபோல் 788
பெரிதினிது பேதையார் கேண்மை 839
கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் 840
குடங்கருள் பாம்பொடு உடனுறைந் தற்று 890
இருட்டறையில் ஏதில்பிணம் தழீஇயற்று 913
தூண்டில்பொன் மீன்விழுங்கி யற்று 931
துன்பம் உழத்தொறூஉம் காதற் றுயிர் 940
தலையின் இழிந்த மயிரனையர் 964
மரப்பாவை நாணால் உயிர்மருட்டி யற்று 1020
மரப்பாவை சென்றுவந் தற்று 1058
மக்களே போல்வர் கயவர் 1071
கரும்புபோல் கொல்லப் பயன்படும் கீழ் 1078
தம்மிலிருந்து தமதுபாத் துண்டற்றால் 1107
பாலொடு தேன்கலந் தற்றே 1121
உடம்பொடு உயிரிடை என்ன 1122
நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் 1148
உப்புஅமைந் தற்றால் புலவி 1302
அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் 1303
உணலினும் உண்டது அறல் இனிது 1326

### காதல் வாழ்வில் கண்ட பொதுநிலை அநுபவங்கள்

வாழ்வில் அடிப்படை உணர்வுகளில் அடிப்படை யானவை, தலையாயவை இரண்டு. ஒன்று பசி; மற்றொன்று காமம். இந்த உணர்வுகள் இரண்டும் எல்லாம் உயிர்க்கும் உண்டு. எனவே தான் உணர்ந்த சீரிய கருத்துக்கள் பல எல்லோரிடமும் போய்ச்சேர காதல் வாழ்வில் கலந்து பின்வரும், தாம் கண்ட, வாழ்வியல் உண்மைகளை எடுத்துக்காட்டு ஆக்கி உரைப்பதன் வழி அவர்தம் பொதுமை உத்தியைப் புரிந்து கொள்ள இயலும்.

தலைவன் இன்றித் தலைவியின் வாழ்வு தழைக்காது. நீரின்றி அமையாத உலகம் போலத் தலைவன் இன்றி அமையாது

தலைவியின் வாழ்வு. இத்தகு நீர் இல்லாதபோது பயிர் எல்லாம் வானத்தை எதிர்பார்த்துக் கொண்டு மழைக்காகக் காத்திருக்கும். வானம் பார்த்த பூமி என்பது வழக்கு. 'வானோக்கி வாழும் உயிர் எல்லாம்' என்பது வள்ளுவம். இவ்வாறே பிரிந்த தலைவன் வரவை நோக்கித் தலைவியும் வாடிக் காத்திருப்பாள். பிரிந்த தலைவன் மீண்டு வந்து காலமறிந்து அளிக்கும் தலையளியில் அவள் உயிர் தழைப்பாள்; உடல் பூரிப்பாள். இந்தக் காம இன்பக் காட்சியின் வழி - வானின் இன்றியமையாது காலமறிந்து பெய்யும் பயனைத் திருவள்ளுவர் நன்கு மக்களுக்கு உணர்த்துகிறார்.

*வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு*
*வீழ்வார் அளிக்கும் அளி.* 1192

உரிமையோடு வாழ்தல் இனிது. அதனினும் உழைத்து உரிமையோடு வாழ்தல் மிக இனிது. அப்படி உரிமையோடு, தன் உழைப்பால் பெற்ற பயனைப் பலரோடு கூடிப் பகிர்ந்துண்ணல் மிக இனிது. இந்தப் பேரின்பத்தைத் திருவள்ளுவர் மக்களுக்கு எல்லாம் உணர்த்த விழைகிறார். காம இன்பத்துள் இந்தக் கருத்து இன்பத்தைத் தோய்த்துத் தருகிறார்.

*தம்மில் இருந்து தமதுபாத்(து) உண்டற்றால்*
*அம்மா அரிவை முயக்கு* 1107

சாக்கிரடீசு ஒருமுறை இப்படிச் சொன்னாராம். 'மாணவர்களே, நான் அறிஞன் என்று பலர் கூறுவதை நீங்கள் அவ்வப்போது கேட்கிறீர்கள். நான் அறிஞனா அல்லனா என்பது பற்றி ஒன்றும் சொல்லேன். ஆனால் ஒன்று மட்டும் உங்களிடம் சொல்லிக் கொள்ள விழைகிறேன். நான் அறியாதது என்னென்ன, என் அறியாமை எத்தகையது என்று நான் அறிவேன். அதனால் தான் என்னைப் பலர் அறிஞன் என்று ஏற்றுக் கொண்டிருக் கிறார்களோ?

இங்குத் திருவள்ளுவர் இந்தக் கருத்தைக் கற்பவர்க்கு, கற்கும் அறிஞர்க்கு எல்லாம் நன்கு தெளிவுபட உரைக்கிறார். 'அன்பர்களே ஒன்றை அறியும் போது அதனை நாம் முன்பு அறிந்து வைக்கவில்லை என்ற உண்மையைத் தெரிந்து கொள்கிறோம். இந்தத் தெளிவு விதையில் இருந்து தோன்றிய முதல் துளிர்போல உள்ளத்திற்கு ஓர் உவகை தருகிறது. இப்படி அறிய அறிய ஒவ்வொரு முறையும் புதுப்புது சிந்தனைகள் தோன்றி ஒன்றுக்கு ஒன்று புதிதாய், ஒன்றுக்கு ஒன்று இனிதாய், ஒன்றுக்கு ஒன்று உயர்வாய் அமைகிறது. அதனால் மேலும்

மேலும் கற்றுப் புதுப்புது உணர்வுகளைப் பெற அறிவு விழைகிறது. எவ்வாறு எனில் தலைவியோடு ஒவ்வொரு முறையும் கூடிப் பெறும் இன்பம் போல.

அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு 1110

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே ஆவர். ஏனெனில் உணவு இன்றேல் கண் பஞ்சடைந்து, கைகால் மெலிந்து, மனம் சோர்ந்து சிந்தனை தடுமாறி உயிர் தளர்கிறது. உயிர்ச்சக்தி பெரிதும் உணவின்வழியே உயிர்க்குப் போய்ச் சேருகிறது, எனவே உண்டல் இனிது. தஞ்சை மாவட்டப் பகுதிகளில் 'கோடை உழு' என்று வெயில் காலத்தில் ஒருமுறை வயல்களை உழுதுப் புழுதி ஆக்கி வெயிலில் வறளவிடுவர். இதனால், மழை வந்ததும் இடும்பயிர் நன்கு விளையும். இஃது உழவர்கள் அனுபவத்தில் கண்ட உண்மை. இவ்வாறே, உண்ட உணவு நன்கு சீரணமாகி, உணவுச் சத்து குருதியாய், தசையாய், எலும்பாய், மஜ்ஜையாய், சுக்கிலமாய் உடலில் சேர்ந்து செரிப்பது உண்டலினும் இனிது. அதன்பின் நன்கு பசித்தபின், துவரப் பசித்தபின் உண்டல் மிக இனிது.

இந்த உணவியல், மருத்துவ இயல் உடலியல், உணர்வியல் உண்மைகளை

உணலினும் உண்ட(து) அறல்இனிது காமம்
புணர்தலின் ஊடல் இனிது. 1326

எனும் குறளின் வழி உணர்த்துகிறார்.

குழந்தைகள் சிறுவர்கள் தெருவில் ஓடி விளையாடும் போது, தோழர் தோழியர் கல்லூரியில் படிக்கும்போது, கணவர் மனைவியர் இல்லத்தில் வாழும்போது ஏதோ ஒரு காரணத்தால் ஒருவர்க்கு ஒருவர் இடையே சிறு மனத்தாங்கல் வந்து பிரிந்து விடுவர். ஆனால் அவ்வப்போது அங்காங்கே சந்திக்க நேரும்போதெல்லாம் ஒருவரோடு ஒருவர் பேசி நட்பைப் பகிர்ந்து கொள்ள விழைவர். ஆனால், தன் மானம் முன் வந்து தடுக்கும். ஆனால், எப்படியோ இறுதியில் ஒருநாள் ஏதோ ஒரு சூழ்நிலையில் ஒருவர் இன்னொருவரைத் தற்செயலாய்க் காண நேரின் யாரேனும் ஒருவருக்குக் கண்ணீர் கலங்கும்; வாய் திறக்கும்; கை தழுவிக் கொள்ளும். இதில் முந்திக் கொண்டவர் அறிவுலகக் கண்களுக்குத் தோற்றவர் போலத் தெரிவர். ஆனால் அன்புலகக் கண்களுக்கு அவர்களே வென்றவர்கள்; அன்பால்,

வென்றவர்கள்; வாழ்வில் வென்றவர்கள். அத்தகைய பூசல்தரும் புன்கணீர் உடைமையால்தான் உலகம் வாழ்கிறது; வளர்கிறது; இந்த வாழ்வியல் உண்மையைப் பின்வரும் காமத்துப் பால் பாடல்வழி திருவள்ளுவர் உலகோர்க்கு உணர்த்துகிறார்.

ஊடலில் தோற்றவர் வென்றார் அதுமன்னும்
கூடலில் காணப் படும் 1327

கல்வி கருதியும், வேறு அரசியல் பொருளாதாரக் கடமை கருதியும் அன்றும் மக்கள் மொழிபெயர்தேயம் சென்றனர்; இன்றும் செல்கின்றனர். அவர்கள் எல்லாம் தம் நண்பர், உற்றார், உறவு, ஊர், நாடு, மொழி, இனம் பிரிந்து வேற்று நாட்டில் வாழும்போது உறும் இன்னல் பல. அப்போதெல்லாம் சொந்தத் தாய்மண்ணை, தாய் நாட்டாரை, தியாகிகளை எண்ணி ஏங்கும் நிலை ஏற்படும். அத்தகைய துன்ப அனுபவத்தை விடத் துன்பமானது அன்புள்ள தன் காதல் தலைவனைப் பிரிந்து வாழும் தனி வாழ்வு.

இன்னாது இனன்இல்ஊர் வாழ்தல் அதனினும்
இன்னாது இனியார்ப் பிரிவு 1158

இளமை, செல்வம், செல்வாக்கு, பட்டம், பதவி இவை பிறரைக் கவர்ந்திழுக்கும் ஆற்றல் உடையன. இளமை அழகில் ஆர்வமுற்று சிலர் நாடிவந்து பழகுவர். செல்வச் செழிப்பைத் துய்க்க வேண்டிச்சிலர் தாமே பரிந்து வந்து பழகுவர். பிறர் செல்வாக்கை, பதவியைப் பயன்படுத்திக் கொண்டு தாங்கள் முன்னேறத் திட்டமிட்டுக் கொண்டு சிலர் வந்து நெருங்குவர். ஆனால் இளமை தீர்ந்தபின் அல்லது கெட்டு நோயுற்றபோது, செல்வம் தேய்ந்து சீர்கெட்டபோது, பதவி பறிபோய் பாழ்பட்ட போது முன்பு நாடிவந்தவர்களும், தேடிவந்தவர்களும், கூடி வந்தவர்களும் எங்கோ ஓடிப்போய் மறைந்து விடுவர். 'ஆம் கெட்டார்க்கு நட்டார் இல்' - இந்த உண்மையைத் தலைவி தன் நெஞ்சிற்குச் சொல்லுவாளாய்ச் சொல்லும் பின்வரும் குறள் உலகிற்கு உணர்த்துவது போல் வேறெவ்வழியிலும் இவ்வளவு ஆழமாக, அகலமாக உணர்த்தல் அரிதே.

கெட்டார்க்கு நட்டார்இல் என்பதோ நெஞ்சேநீ
பெட்டாங்கு அவர்பின் செலல் 1293

இன்னொரு வாழ்வியல் உலக உண்மையையும் தலைவி 'தன் நெஞ்சொடு புலத்தல்' பாங்கில் திருவள்ளுவர் உலகவர்க்குத்

தெளிவாக்குகிறார். இன்பத்திற்கு எல்லோரும் துணையாவர்; தேன் உள்ள இடத்தில் ஈயும் எறும்பும் கூட வரும். ஆனால் துன்பத்தில் பங்குகொள்ள நெருங்கிய நண்பர் ஓரிருவரே துணைநிற்பர். யாவரினும் நெருங்கியவர், யாவற்றினும் நெருங்கியது பிறந்தநாள் தொட்டு மறைந்த நாள்வரை உடன் இருந்து ஊடாடி மகிழ்ந்தும் வருந்தியும் உடன்வாழ்வதே அவரவர் தம் நெஞ்சே அல்லவா! அந்த நெஞ்சம் கூடத் துணைநில்லாது போயின் நிலை என்னாகும்.

துன்பத்திற்கு யாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சம் துணையல் வழி 1299

உடம்பு, உயிர், உலகு, இறை, தொடர்பு தத்துவஞானிகள் தம் மெய் உணர்வால் உணர்ந்து தெளிந்த உண்மைகள். அத்தகு உண்மை ஒன்றைத் தலைவன் தனக்கும் தன் காதலிக்கும் இடையே அமைந்து விளங்கும் தொடர்பைக் குறிப்பிடும் போது அவன் கூற்றாக உலகுக்கு உரைக்கிறார்.

இன்ப துன்ப துய்ப்பு உடம்பொடு இயைந்து உயிர் உள்ளவரையே. பிறந்தநாள் தொடங்கி இறக்கும் நாள்வரை உடலும் உயிரும் இயைந்தே உள்ளன. எனினும் ஒருவரை இன்னார் எனும்போது உடலையோ உயிரையோ பிரித்தெண்ணாது ஒன்றாகவே குறிக்கிறோம். உயிர் இன்றி உடல் இயங்காது; உயிர் இன்றி உடல் துய்க்கலாகாது, இந்தத் தத்துவ உண்மையை, உயிர் உடல் தொடர்பைப் பின்வரும்

உடம்பொ(டு) உயிரிடை யென்னமற்(று) அன்ன
மடந்தையொ(டு) எம்மிடை நட்பு 1122

என்னும் குறள்வழி உலகவர்க்கு உணர்த்துகிறார்.

## உவமை பொதுநிலைத் தேர்வு

'புலன் அல்லாதன புலனாதலும் அலங்காரமாகிக் கேட்பார்க்கு இன்பம் பயத்தலும் உவமை என்பர் இளம்பூர்ணர்.

பின்வரும் தொல்காப்பியப் பொருளதிகார உவமையியல் நூற்பாக்கள் உவமைத்தோற்றம், பின் விரவி வரல், அந்த உவமை உயர்ந்ததன் மேற்று வரல், அது நான்கு நிலைகளைக் கொண்டு அமையும் என்று குறிப்பிடுகின்றன.

வினைபயன் மெய்உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமைத் தோற்றம்

(தொல்.நூற்பா. 1222)

*விரவியும் வரும் மரபின என்ப.* *(தொல். நூற்பா. 1223)*

*உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை*

*(தொல்.நூற்பா. 1224)*

*சிறப்பே நலனே காதல் வலியோடு*
*அந்நாற் பண்பும் நிலைக்களம் என்ப.*

*(தொல்.நூற்பா. 1225)*

மேற்குறிப்பிடப்பெற்ற நூற்பாக்களையும், அவற்றுக்கு இளம்பூரணர் வழங்கும் உரையையும் நோக்கின் உவமை பற்றிப் பின்வரும் கருத்துக் கொள்ளலாம்.

இதுகாறும் பொறிகளால் அறியப்படாத பொருள்கள் புலனாதல், அப்பொருள்கள் அழகுடன் உணர்த்தப்பெறல் ஆகிய இரு பயன்களுக்காக இலக்கியத்தில் உவமைகள் புலவர்களால் கையாளப் பெறுகின்றன. தொழில், பயன், வடிவு, நிறம் என்ற நான்கு வகையில் அது புலனாகும். இவ்வாறு நான்கு வகையாக வரும் உவமைகள் ஒரு பொருளால் மட்டுமன்றி இரண்டும் பலவும் விரவியும் வரும். பொருள் புலப்பாட்டிற்கென எடுத்துக்கூறப்பெறும் உவமை ஆராயுங்கால் உவமிக்கப்படும் பொருளாகிய உவமேயத்தைவிட தன்மையில் உயர்ந்து அமையும். சிறப்பு, நலன், காதல், வலி என்னும் நான்கு வகைப்பண்பும் உவமைத் தோற்றத்திற்கு நிலைக்களம் ஆகும்.

"புலவருடைய உள்ளம் ஒன்றை உணரும் போது அதன் தொடர்பான மற்றொன்றையும் உணர்கிறது. தொடர்பான மற்றொன்று முன்னைய ஒன்றனுக்கு ஒப்பானதாக இருந்தால் அந்த ஒப்புமையிலே புலவரின் அகக்கண் புதிய அழகைக் காணுகிறது. அவ்வாறு ஒப்புமை கண்டு கூறுவதையே உவமை என்று இலக்கண நூலார் கூறுவர்

அழகுள்ள ஒரு பொருளை மற்றொன்றன் அழகோடு ஒப்பிட்டுக் காணும் இந்தக் கலைகள் பலவற்றிற்கு அடிப்படை என்பர்

ஒரு தன்மையனவாய்த் தோன்றும் பொருள்களையும் வேறுபடுத்தி அறிதலே அறிவியல் துறையிலும் கடமையாக உள்ளது. ஆயின் கலைஞரோ வேறுபட்ட பொருள்களுக்குள்ளும் ஒற்றுமை கண்டு இயைப்பதில் கருத்தாக உள்ளனர். படைப்பில் உள்ள எல்லாப் பொருள்களுக்குள்ளும் உறவு காண்கின்றனர்.

அந்த மகிழ்ச்சியே உவமையாகவும் உருவகமாகவும் அவர்களின் இலக்கியத்தில் அமைகின்றது."

- டாக்டர் மு. வரதராசன், இலக்கியத்திறன், பக். 192-193, பாரி நிலையம், சென்னை, 1966.

"உணர்ச்சி வெளிப்பாட்டிற்கு உறுதுணை செய்யவும் தன் கருத்துக்களைப் பிறர் கருத்தினில் கொள்வதில் எளிமை யூட்டவும், திறமைக்கோர் திறவுகோலாகவும் கவிஞன் உவமைகளைக் கையாளுகின்றான். சில நேரங்களில் தற்சார்புக் கருத்துக்களைப் பொதிந்து வைக்கவும் அவனுக்கு உவமை தக்க கருவியாக அமைகின்றது. வேறுசில சமயங்களில் உவமைகளே உள்ளத்தின் வார்ப்படங்களாக அமைந்து, உரைப்பானின் உள்ளத்தை நுகர்வான் உணர்ந்து கொள்ள வழி வகுத்துவிடுகின்றன."

- டாக்டர் கு. மோகனராசு, ஒப்புமை ஒளியில் வள்ளுவம், ப. 29, வள்ளுவர் கழகம், சென்னை, 1980.

"உலகக் கவிதையில் சில படிமங்கள் அடிப்படையானவை. ஆறு, மலை, கடல், வானம், மழை போன்ற இயற்கைக் கூறுகள் காலப்போக்கில் மானுட மனத்தின் முக்கிய இயல்புகளின் அடையாளங்களாக மாறிவிட்டன."

- ஜெயமோகன், சங்கச் சித்திரங்கள், கவிதா பப்ளிகேஷன், சென்னை, 2002.

இப்படி உலகப் பொது உவமை படிமங்களையே திருவள்ளுவர் எடுத்தாண்டுள்ளார். தமிழ் இலக்கிய மரபுக்கே உரிய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை முதலிய படிமங்களை அவர் மேற்கொள்ளாததும் இங்கு நோக்கத்தக்கது.

கடையேழு வள்ளல்களுள் ஒருவனாகிய அதியன், நீடித்த ஆயுள் நல்கும் நெல்லிக்கனியின் சிறப்பை மறைத்து, புலமைச் செல்வி ஔவை நீண்டநாள் வாழவேண்டும் என்ற சிறந்த குறிக்கோளில் அதனைத் தான் உண்ணாது ஔவைக்கு அளித்த போது, ஔவை பாடிய

"நீலமணி மிடற்று ஒருவன் போல
ஆதல் நின்னகத்து அடக்கி
சாதல் நீங்க எமக்கீந் தனையே" (புறம்)

என்ற பாடலில் அமைத்த உவமைவழி ஔவையார் சிவபெருமானிடம் கொண்டுள்ள ஈடுபாடு விளங்குகிறது.

ஆழி மழைக்கண்ணா ஒன்றும்நீ கைகரவேல்
ஆழியுள் புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி
ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கருத்து
பாழியந் தோளுடைப் பத்மநாபன் கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்கம் உகுத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்து ஏலோர் எம்பாவாய்.
(நாலாயிரத் திவ்விய பிரபந்தம், 477)

என்ற பாடலில் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி ஆண்டாள் மழையையும், மழையின் நிகழ்ச்சிகளையும் மாமாயன் தோற்றத்தில் கண்டு பாடியமை அவர்தம் உள்ளக்கிடக்கை கண்ணன்பால் படிந்துள்ளமை தெரிகிறது.

எச்.ஏ. கிருஷ்ண பிள்ளையின் நெஞ்சம் இயேசுபிரானிடம் தோய்ந்திருந்ததை அவர் பாடிய இரட்சணிய யாத்திரிகத்திலுள்ள பின்வரும் பாடல் புலப்படுத்தும்:

"செழுமலர்ச் சோலை ஓங்கும்
சினைதொறும் நிறையப் பூத்த
கொழுமுகை அவிழ்ந்து செந்தேன்
குளிர்நறுந் துளிவார் காட்சி
அழகிய மணவா ளன்தன்
அகத்துவந்(து) அடையும் ஆன்மக்
கழிதுயர்க்(கு) இரங்கிச் சிந்தும்
கண்ணின்நீர்த் தாரை போலும்" (இ.யா. 304)

முன்னே குறிப்பிட்ட பாடல்கள் பாடியோர்தாம் சார்ந்த சமயங்களைப் புலப்படுத்துவன. எனவே, பிற சமயங்களிலிருந்து தம்மை எல்லை கட்டிக்கொள்வன. அப்படியே இசுலாமியப் புலவராகிய உமறு, மஸ்தான் சாகிபு முதலானவர்கள் பாடல்களும் அமையும்.

இப்படி உண்மையை உணர்த்த, விளக்க, தெளிவாக்கத் தாம் கையாளும் எடுத்துக்காட்டுகள் எல்லோர்க்கும், எங்கும், எக்காலத்துக்கும் போய்ச்சேருமாறு எண்ணி, அதற்குத்தகத் தன் எடுத்துக்காட்டுகளை அமைத்துக் கொள்ளுதல் பொதுமைநிலை உத்தியாகும். இந்த உத்திவழி தாம் யார், தாம் எந்த எல்லைக்கு உட்பட்டவர் என்று காட்டிக்கொள்ளாது தம் கருத்து எங்கும், எவர்க்கும், எக்காலத்தும் ஏற்கத்தக்க வகையில் அனைவர்க்கும்

பொருந்தும் உவமைகள், வாழ்வியல் அனுபவ எடுத்துக்காட்டுகள் இவற்றின்வழி திருவள்ளுவர் புலப்படுத்துகிறார்.

அவர்தம் கருத்துக்களை உருவாக்க, 'உணர்த்த, தெளிவாக்க, விளக்க, உறுதியாக்க மேற்கொண்ட இயற்கை உவமைகள் பல.

இயற்கை நிலம், நீர், தீ, காற்று, விண் முதலிய பஞ்ச பூதங்களாக, அவற்றுவழி வந்த மரம், செடி, கொடி, முதலிய ஓரறிவு உயிர்தொட்டு புழு, பூச்சி, பறவை, விலங்கு முதலிய ஐயறிவு வரை அமைந்து உள்ளது. இவற்றின் இயல்பு, இவற்றின் வழி நிகழும் நிகழ்ச்சிகள் வாயிலாகத் தான் கூறும் உண்மைகள் பலவற்றைத் திருவள்ளுவர் தெளிவாக்கக் காணலாம்.

நிலம்

ஐம்பூதங்களில் ஒன்றான நிலம் குறளில் பல இடங்களில் கருத்து விளக்கத்திற்காக உவமையாகக் கையாளப்பட்டுள்ளது.

அன்பின் வழியது உயிர்நிலை; அன்பே வாழ்வின் அடிப்படை. அத்தகு அன்பு இன்றேல் வாழ்வு இல்லை; உறுதியாக இல்லை. எப்படியெனில் வற்றல் மரம் பட்டுப்போன மரம் மீண்டும் துளிர்க்க வாய்ப்பில்லை. ஒரு கால் முருங்கை முதலான மரம் பட்டுப்போனாலும் நீர் உள்ள மண்ணில் கிடந்தால், ஏதேனும் ஒரு பகுதி துளிர்ப்பதற்கு வாய்ப்புண்டு. ஆனால், வறண்ட பாறையில் அக்கட்டை கிடந்தால் துளிர்ப்பதற்குச் சற்றும் இடம் இல்லை அல்லவா? அப்படியே அன்பற்ற வாழ்வு துளிர்க்காது.

அன்பகத்(து) இல்லா உயிர்வாழ்க்கை .......... 87

மனித வாழ்வு உருவாக்கத்தில் பெற்றோர் மரபணுக் களுக்குப் பங்கு உள்ளது. பெரும்பங்கு ஒருவர்க்கு வாய்க்கும் சூழலைப் பொறுத்தே அமைகிறது. மனத்துள்ளதுபோலக் காட்டி இனத்துள்ளாகும் வாழ்வு. எப்படி வானின்று பெய்கின்ற தூயமழை நீர் பெய்யும் நிலத்தில் உள்ள மண்ணின் குணம், நிறத்திற்கு ஏற்ப அதுவும் மாறுகிறது.

அப்படியே ஒருவர் சேரும் இனத்திற்கு ஏற்பவே அவர் அறிவு அமைகிறது.

நிலத்தியல்பால் நீர்திருந்(து) அற்றாகும்.......... 452

ஒருமுறை ஒரு தொண்டன் இயேசுநாதரிடம், 'ஒரு முறை இருமுறை மன்னிக்கலாம். எத்தனை முறை வரைக்கும்

மன்னிக்கலாம்?' என்று கேட்டானாம். 'அதற்கு எல்லையே இல்லை' என்றாராம் அவர். அதுபோல, ஒருவர் கூறும் இகழ்வான சொற்களைப் பொறுத்துக் கொள்வதற்கு எல்லை இல்லை. பொறுத்தார் பூமி ஆள்வார். எப்படி எனில், தோண்டித் தோண்டிக் கொண்டே இருக்கும் மக்களையும் தாங்கி வாழவைத்துக் கொண்டுதானே இந்த நிலம் உள்ளது.

"அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை" 151

ஒருவர்க்கு உரிய நில அளவையில் களர் நிலத்தைக் கணக்கில் வைத்துக்கொள்வதில் பயன் இல்லை. ஏனெனில் அதில் எதனையும் பயிரிட முடியாது. எந்தப் பயிரும் செடியும் கொடியும் மரமும் அதில் வேர் ஊன்றாது; முளைக்காது; முளைத்தாலும் கருகிப்போகும். அப்படியே ஆறறிவு பெற்றும் மக்களினத்தில் கற்றுத் தம் அறிவின் விளக்கம் பெறாராயின் அவர்கள் மனித இனத்தில் உளராகக் கருதப்பெறமாட்டார்.

"உளர்என்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
களர்அனையர் கல்லா தவர்" 406

விதை முளைக்கும்போதே முளையின் இயல்பை அறியும்போது, அது தோன்றிய நிலத்தின் நிலையை வளத்தை வளமின்மையை, நலத்தை நலமின்மையைக் கண்டு கொள்ளலாம். அதுபோல, ஒருவர் உரையாடும் பேச்சிலிருந்தே அவர் எத்தகைய சூழலில் வளர்ந்தவர் என்பது தெரிந்துவிடும். இலை, பூவுக்காகக் காத்திருக்க வேண்டாதது போல, அவர் பொருள், செயலுக்காகக் காத்திருக்க வேண்டுவதில்லை.

கணவன் மனைவிக்கு உரிய தேவைகளைத் தானே நிறைவேற்றின் இல்லறம் இன்பறமாக அமையும். உரிய காலத்தில் அவளுக்கு உரிய அவள் உணர்த்திய தேவைகளைக் கணவன் நிறைவேற்றாது போனால் வெறுப்பள்; வெறுப்பு மிக்கு ஊடுவள்; ஊடிப்பின் பிரிவள். எப்படியெனில், நிலத்துக்கு உரியவன் ஒருவன் அவ்வப்போது நேரில் சென்று, அதன் வளர்ச்சி நிலையைக் கண்டு அவ்வப்போது உரியனவற்றைச் செய்யான் ஆயின், முதலில் ஊடும்; பின் கருகும்; அதன்பின் அவனுக்கு அது கைவிட்டுக் கூடப் போய்விடும்.

"செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும்." 1039

தன்னைச் சுற்றிலும் உள்ள நிலம் தரிசாகக் கிடக்க, 'யாம் வறியோம்' என்று சோர்ந்து இருப்பானை உழைப்புக்குப் பத்து

மடங்கு வழங்கும் நல்லாள் ஆகிய மண்மகள் 'ஒன்றுக்கும் உதவாக்கரை' என்று எள்ளி நகுவள்.

"இலம்என் றசைஇ இருப்பாரைக் காணின்
நிலம்என்னும் நல்லாள் நகும்" 1040

நீர்

ஐம்பூதங்களில் ஒன்றான நீர் திருக்குறளில் பல இடங்களில் கருத்து விளக்கத்திற்காக உவமையாகக் கையாளப் பட்டுள்ளது.

வாழ்க்கைத் துணை உரிய காலம், உரிய அளவறிந்து வாழ்வை வளமாக்கிச் செல்லல் வேண்டும்; உழவர் வேண்டும் போது வேண்டியாங்குப் பெய்யும் மழையைப் போல.

"தெய்வம் தொழாஅள் கொழுநற் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை" 55

ஒப்புரவு அருளால், அறிவால், குறிப்பறிந்து பிறர் திரும்பச் செய்யாதவாறு செய்யும் உதவி. எதனைப் போல? மழையைப் போல. தக்க காலத்தில் பெய்து பயிர்களை, உயிர்களைக் காக்கும் மழைக்கு அந்தப் பயிர்களும் உயிர்களும் கைம்மாறாகச் செய்ய வல்லன என்ன?

"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்(டு)
என்னாற்றுங் கொல்லோ உலகு" 211

ஊர்க்கண் அமைந்த நீர்நிறைந்த நீர்நிலை எல்லா உயிர்க்கும் இயல்பாகப் பயன்படும். எந்த வகைக் கட்டுப்பாடும் இன்றி உயிரினங்கள், மக்கள் தாமே சென்று நீருண்ணுமாறு அது எளிதில் அமைந்திருக்கும். அப்படியே பேரறிவாளன் செல்வமும் உலக மக்கள் தம் ஆவலை நிறைவேற்றும் வண்ணம் உதவும்.

"ஊருணி நீர்நிறைந்து அற்றே உலகுஅவாம்
பேரறி வாளன் திரு." 215

கற்கக் கற்கக் கல்வி அறிவு பெருகும்; மணற்கேணி தோண்டத் தோண்ட ஊற்றுப் பெருகி நீர் நிறைந்து கொண்டிருக்கும்.

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத்(து) ஊறும் அறிவு. 396

'தொட்டு அனைத்து', 'கற்று அனைத்து' எனும் தொடர்கள் எந்த அளவு கற்கிறோமோ அந்த அளவே அறிவு

பெருகும் என்பதைத் தெளிவு செய்யக் காணலாம். தோண்டாத கிணறு ஊறாதது போல, கற்காத மனத்தில் அறிவு, சிந்தனை ஆற்றல் தோன்றி வளராது என்க.

வருபுனலாயினும் உறுபுனலாயினும் நீருக்கு எல்லாம் அடிப்படை மழையே. குளிர்ந்த மழைத்துளியில் பயிர் துளிர்க்கும்; அத்துளிர்ப்பினின்று விளையும் தானியங்கள், கனிகள், தளிர்கள் இவற்றை நம்பியே உயிர்கள் எல்லாம் வாழ்கின்றன. எனவே, வானோக்கி வாழும் உலகு எல்லாம். அது போலக் குடிமக்கள் தங்கள் வாழ்வுக்கு, தொழில் வளர்ச்சிக்கு, துய்ப்புக்கு ஆள்வோரது நேர்மையையே நோக்குவர்.

"வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழும் குடி." 542

அம்மழை பெய்யாது பொய்க்கின் உலகத்து உயிர்களுக்கு எத்துணைத் துன்பங்கள் விளையும். நீர் இன்றேல் விளைவு இல்லை; தொழில் இல்லை; துய்ப்பு இல்லை. அவ்வாறே இரக்கமற்ற தலைவனின் ஆட்சியும் மக்களுக்கு.

"துளியின்மை ஞாலத்திற்கு எற்றுஅற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு." 557

அல்லி, தாமரைத் தண்டுகளின் உயரம் அது வாழும் நீர் நிலையின் ஏற்றத்திற்கு ஏற்ப உயரும். அதுபோல, மனிதன் தன் வாழ்வில் உயர்வது அவன்தன் ஊக்கத்தின் அளவைப் பொறுத்து அமைகிறது.

வெள்ளத்(து) அனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத்(து) அனையது உயர்வு 595

மழை பருவந்தோறும் பெய்யும் இயல்புடையது. அது எப்போதேனும் பெய்யாது போவதும் உண்டு. அது போன்றதே சீருடைச் செல்வரின் வறுமையும். சில காலமே அந்த வறுமை நிற்கும். பின் செல்வர் ஆவர்; வழங்குவர்.

"சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந்(து) அனைய(து) உடைத்து." 1010

பசி இரண்டு; ஒன்று உணவுப் பசி; மற்றொன்று உணர்வுப் பசி. முன்னது உடல் சார்ந்தது; மற்றது பெரிதும் மனம் சார்ந்தது. மன உணர்வுக்கு, நினைவுகளுக்கு எல்லை ஏது. அதன் ஆழம், அகலம், யார் அறிவார். அதில் தோன்றும் எண்ண அலைகள் எழுந்து எழுந்து அடங்கும் எண்ண அலைகள் எத்தனை! எத்தனை!

"கடலன்ன காமம் ........................" 1137

அவ்வாறே, காம இன்பமும் ஆழ்ந்து அகன்று நுண்ணியது.

"இன்பம் கடல்மற்று ..................." 1166

காம உணர்வு எழுச்சி மிக்கது; வேகம் உடையது; அதில் அகப்பட்டார் எழுவது அரிது. கடும்புனலை நீந்திக் கடப்பது எவ்வளவு அருமை.

"காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்" 1167

எதிர்நோக்கியார்க்கு அப்போதே பெய்த மழையைப் போன்றது, அன்பு வேண்டிய தலைவிக்கு அவள் வேண்டுங்கால் தலைவன் வழங்கும் தண்ணளி.

"வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி." 1192

செம்புலப் பெயல்நீர் போல, தாம் கலந்த அன்பு கணவன் மனைவியர்க்கு இடையில் தோன்றும் சிறுசிறு ஊடலின் பின் கூடுவதால் பெறும் பேரின்பத்திற்குப் புத்தேள் நாடும் ஈடாகா.

"புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு
நீர்இயைந் தன்னார் அகத்து." 1323

## தீ

தீய சொல் தீயினும் கொடியது. தீய சொல்லால் ஒருவர் நெஞ்சில் அமைந்த துயரப்புண் என்றும் ஆறாது நினையுந் தோறும் குத்திக்குத்திப் புண் போல் துன்புறுத்தும். ஆனால், தீயினால் சுட்டபுண் சில நாட்களில் ஆறிவிடும். எனவே, தீய சொல் தீயினும் கொடிது.

"தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு." 129

தீ குறித்த இடத்தைக் குறித்த காலத்தில் அழிக்கும். ஆனால், தீயவை எல்லாவற்றையும் பரம்பரை பரம்பரையாக அழிக்கும். எனவே, தீயவற்றை விட எண்ணத்தால் சொல்லால் செயலால் பிறர்க்குத் துன்பந்தரும் தீய செயல்களைச் செய்தல் கூடாது.

பொன் தீயில் உருகி உருகித் தூய்மை பெறுகிறது. மனிதர்கள் தவம், மன நோன்பு செய்யச் செய்ய மன மாசகன்று தூய்மை பெறுவர்.

"சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு." 267

பல சுடரை உடைய பெரிய எரிபோல் பல்வேறு வகையான துன்பம் ஒருவர் செய்யினும், அத்துன்பத்தான் தோன்றும் சினம் பிறரையும் திருத்தாமல் தன்னையும் அழிக்கும் என்பதை எண்ணி, அவாவால் சினம் கொள்ளாமையே நல்லது. மன்னித்தல் வேண்டும்.

இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று 308

அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் முதலான குற்றம் வருமுன்னரே மன எழுச்சியைக் காத்துக் கொள்ளல் வேண்டும். இன்றேல் வாழ்வு தீயிலிட்ட வைக்கோல் போல் எளிதில் அழிந்து போகும்.

விளக்கொளி இருள் அகற்றும் இயல்பினது (435) விளக்கொளி மெலிய மெலிய அந்த மெலிவு நோக்கி இருள் நெருங்கி நெருங்கி வரும். அதுபோல, இந்தப் பசப்பு என் கணவன் தழுவலின் மெலிவு நோக்கி என்னை நெருங்குகிறது.

"விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு." 1186

### காற்று

எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி அன்பு செய்யும் இறை உணர்வுடைய அருள் ஆள்வார்க்கு என்றும் துன்பம் ஒன்றும் வாராது. எதுபோல் எனில் ஐம்பூதங்களில் இரண்டாவ தாகிய காற்று, அதிலிருந்து தோன்றிய அழுத்தக் காற்றாகிய தீ, அதிலிருந்து தோன்றிய நீர், அதிலிருந்து தோன்றிய நிலம், இப்படி வழிவழியாக நிலைத்து நிற்கும் இந்த உலகில் வாழும் சான்றோர்கள் கண்ட முடிபு இது.

அல்லல்அருள் ஆள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி 245

### இயற்கை – ஓர் அறிவு உயிர்

அனிச்ச மலர் மிகமிக மென்மையானது. அதன் மணத்தை அனுபவிக்க மூக்கருகே கொணர்ந்தாலும் மூச்சுக் காற்றின் வெப்பம் தாங்காமல் வாடிவிடும். அத்தகு மென்மையான இதழுடைய அனிச்ச மலரிலும் மிக மென்மையானது நம்மை

நாடி வரும் விருந்தினர் உள்ளம். விருந்தை ஏற்பவர் முக மாற்றத்தைச் சேய்மையில் கண்டபோதே வருந்தி வாடிவிடும்.

மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து 190

பசிய இலைகளுக்கு இடையே நன்கு பழுத்த கனி செவ்விய, கருத்த, மஞ்சள் நிறங்களில் தோன்றித் தன் இருப்பைப் பார்ப்பவர் அறிய நன்கு காட்டிக் கொண்டிருக்கும். காயோ பச்சை வண்ணத்தில் பசிய இலைகளுக்கு இடையே மறைந்திருக்கும். இவ்வாறு, நன்கு கண்ணுக்குப் புலப்படும் கனியை விட்டுவிட்டுக் கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்திருக்கும் காயை யாராவது பறிப்பார்களோ. இனிக்கும் மணக்கும் கனியை விட்டுவிட்டுக் கசக்கும், புளிக்கும், துவர்க்கும் காயை யாராவது பறிப்பார்களா? அவ்வாறே இனிய, நல்ல, பயன் மிக்க சொற்கள் பல இயல்பாகத் தாய்மொழியில் நிறைந்திருக்கக் கொடிய, தீய, துன்பந் தரும், வழக்கில் இல்லாத, பிற மொழியில் உள்ள பழிச்சொற்களை இழி சொற்களைக் கூறுவரோ?

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. 100

சமுதாய நலத்திற்குச் செல்வத்தை எப்படிப் பயன்படுத்துவது என்று உணர்ந்த நயனுடையான் தன் செல்வத்தைப் பலர்க்குப் பயன்படுமாறு தொழிற்சாலைகள், கல்வி நிலையங்கள், பொது நீர்த்தேக்கம், வயலுக்கு நீர் செல்வதற்கு ஏற்ற வாய்க்கால்கள் இப்படி மக்களுக்குப் பயன் படும் நல்லவழிகளில் செலவு செய்வான். எவ்வாறு எனில் சுவை யாலும், சத்தாலும், மணத்தாலும், வண்ணத்தாலும், மென்மை யாலும் ஐம்புலன்களுக்குப் பயன்தருவதோடு, ஊர்மக்களுக்கு எளிதாக உதவும் வகையில் ஊருள்ளேயே பழுத்துநிற்கும் மரம் போல. மேலும் அதன் வித்துவழி பழம் பெற்றவர்கள் அதன் வித்துவழி தங்கள் தங்கள் தோட்டங்களில் பயிரிட்டுச் சொந்தமாக வளர்த்துப் பயன்பெறுவதற்கு ஏற்றவாறு உள்ளூரில் பழுத்து நிற்கும் கன மரத்திற்கு ஒப்பாவர்.

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின் 216

சமுதாயத்தில் உள்ள குறைகள், கேடுகள், சிக்கல்கள் இவற்றை எப்படி எப்படித் தீர்க்கலாம் என எண்ணித் தன் நிலத்தின்வழி, தொழிலின் வழி பரம்பரைச் சொத்தின் வழி, தன்

உழைப்பின் வழி வரும் செல்வம் அனைத்தையும் அனைத்து வகையாலும் அறம் செய்யும் பெருந்தகையானுடைய செல்வம் வேர், தண்டு, பட்டை, துளிர், இலை, பழுப்பு, பூ, பிஞ்சு, காய், கனி, விதை இவற்றால் எல்லாம் உதவும் மருந்தாகித்தப்பா மரத்திற்கு ஒப்பாகும்.

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின் 216

உற்றநோய் நோன்றலும் உயிர்க்கு உறுகண் செய்யாமையும் ஆகிய மனத்தவமே தவம். அவ்வாறு மனப் பக்குவம் பெறாமல் பார்க்கிறவர்களை ஏமாற்றுவதற்காகப் புறத்தே காவி உடை அணிந்து கொண்டு அகத்தே மாசு கொண்டவர்கள் குண்டுமணி போலப் புறத்தே செம்மையும் அகத்தே கருமையும் கொண்டவர்கள் ஆவர்.

புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியார் உடைத்து 277

கற்றதைப் பிறர் உணர விரித்துரைக்கும் ஆற்றல் அற்றவர் மணமற்ற காகிதப் பூப் போல்வர்

இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்றது
உணர விரித்துரையா தார். 650

பகை முள் மரம் போன்றது. முளையிலேயே, பகை ஆற்றல்பெறும் முன்பே அதனை அழித்துவிட வேண்டும். முள்மரம் நன்கு வளர்த்துவிட்டால் அது குத்திக் கிழித்துவிடும். பகைவரும் அப்படியே

இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொள்ளும் காழ்த்த இடத்து 879

நச்சுத்தன்மை வாய்ந்த மரம், செடி, கொடி எதுவும் உள்ளூரில் வளர்க்கமாட்டார்கள். அதுவாய் வளர்ந்தாலும் அதனை வேரோடு பிடுங்கி எரித்து அழித்தொழித்து விடுவர். அப்படி ஒரு செடி அன்று, கொடி அன்று மரமே வளர்ந்து பழுத்து நின்றால், அதனால் அந்த ஊரில் வாழும் உயிர்களுக்கு எவ்வளவு ஆபத்து, அவ்வளவு ஆபத்து எவரும் நெருங்காதவாறு தன் செல்வத்தை வைத்திருப்பவனுடைமை; அந்தச் செல்வத்தால் ஊரில் கேடு பரவுமாறு பாவ வழியில் செலவழிப்பவன் செல்வம் ஆகும்.

நச்சப் படாதவன் செல்வம் நடுஊருள்
நச்சு மரம்பழுத் தற்று 1008

ஒத்தது அறிந்து, இயல்பாகவே பிறர்க்கு உதவுவோர் மனிதர்கள். அப்படி உணர்ந்து உதவாதவர் மனித வடிவில் உள்ள கயவர். அவர்கள் கரும்பு போன்றவர்கள். வலியவர் கசக்கிப் பிழிந்துதான் பயன்படுத்தவேண்டும்.

சொல்லப் பயன்படுவர் சான்றோர்; கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ் 1078

மலர் மொட்டுள் மணம் அடங்கியுள்ளது. அதுபோல, காதலியின் புன்னகையில் அவள் அன்பு குறிப்பாக அமைந்துள்ளது.

முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதுஒன்று உண்டு 1274

காமம் காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலரும் என்ற குறள் ஈடு இணையற்றது.

இப்படியே, இயற்கையில் ஈரறிவுயிராகிய என்பிலாத புழு வெய்யிலில் அகப்பட்டுத் துடிப்பது போல அறம் அல்லாதாரை வாட்டும் (77) என்று ஒரு புழுவின் வழி அறத்தின் ஆற்றலை உணர்த்துவர்.

நீர்வாழ் உயிர் இனங்களுள் ஆமை, முதலை, மீன் இவை முறையே புலன் அடக்கத்திற்கும் வாழும் இடத்தால் வலிமையும் வலிமையின்மையும் ஒருவர் பெறும் நிலைமைக்கும், சூதின் கேட்டினை உணர்த்துவதற்கும் திருவள்ளுவர் பயன்படுத்தி உள்ளார்.

பறவைகள் வாழ்வியல்வழி பல அரிய உண்மைகளைத் திருவள்ளுவர் உணர்த்துகிறார். அவற்றுள்

குடம்பைத் தனித்தொழிய புள்பறந் தற்றே
உடம்பொடு உயிரிடை நட்பு 338

என்பதும் ஒன்று.

உடம்பின் நிலையாமையை உணர்த்த வந்தபோது பலநாள் முயன்று பல்லிடங்கள் சென்று உரிய பொருள்களைத் தேர்ந்து எடுத்துக்கொண்டு வந்து நன்று சேர்த்துக் கட்டிய கூட்டை விட்டுவிட்டுப் பறவை ஒன்று பறந்துபோவதுபோல உடலை விட்டு உயிர் விரைந்து போய்விடும்.

பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. 481

காக்கையோடு ஒப்பிடும்போது கோட்டான் மிக்க வலிமையுடையது. ஆனால் பகற்போதில் கோட்டானுக்குக் கண் அவ்வளவாகத் தெரியாது. அந்தக் குறைபாடுடைய பகற் காலத்தைப் பயன்படுத்திக் கொண்டு முயன்றால் கோட்டானை விட ஆற்றலில் குறைந்த காக்கையும் அதனை வென்றுவிடும்.

இந்தப் பறவை இனத்திடம் அமைந்துள்ள வாழ்வியல் உண்மையை ஆட்சித் தலைவன் ஒருவன் தான் நிலைநிறுத்த விழையும், சட்டசபையில் சட்டமாக்க விரும்பும் ஒரு கொள்கையை நிலைநாட்டிக் கொள்ளப் பயன்படுத்த வேண்டும் என்று திருவள்ளுவர் அறிவுறுத்துகிறார்.

'கூடி வாழ்ந்தால் கோடி நன்மை', 'மனிதன் ஒரு சமுதாய உயிரினம்' என்ற கருத்திற்கு இணங்க உறவு, நட்பு முதலிய சுற்றம் சூழ உழைத்துப் பெற்றதை உண்ணும்போது அரிதாகப் பெற்ற ஒரு பொருளை அனுபவிக்கும் பொழுது பாத்துண்ணல், கலந்தனுபவித்தல் வேண்டும் என்னும் கருத்தைக் கரவாது உண்ணும் காக்கையின் வழி வள்ளுவர் உணர்த்துகிறார்.

காக்கை கரவா கரைந்துண்ணும்ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள 527

ஒரு தலைவன், அவன் குடும்பத் தலைவன் ஆயினும் சரி, கட்சித் தலைவன் ஆயினும் சரி, ஆட்சித் தலைவன் ஆயினும் சரி தனக்குச் செல்வாக்கு குறைந்திருக்கும் காலத்தில் 'இந்தப் பூனையும் பாலைக்குடிக்குமா' என்ற நிலையில் காலம் பார்த்து அமைதியாக, பொறுமையாகக் காத்திருத்தல் வேண்டும். தக்க காலம் வாய்த்தபோது மாற்றார் எதிர்பாராத வகையில் ஒரே அடியாக முயன்று தன் தலைமையை, தன் கொள்கையை நிலை நாட்டிக் கொள்ளல் வேண்டும்.

இதனைக் கொக்கின் வாழ்வியல்பில் வைத்து நோக்கிப் பின்வருமாறு பாடுகிறார் திருவள்ளுவர்,

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து 490

இவ்வாறே விலங்குகள் வாழ்வு இயற்கை வழியும் பல உண்மைகளைத் தெளிவுற, வலிவுற பொதுநிலைநோக்கில் திருவள்ளுவர் புலப்படுத்தி உள்ளார்.

ஆட்டுக்கடா சண்டையிடுவது, போட்டிக் கடாக்களை நிறுத்திச் சண்டையிடச் செய்வது பட்டி தொட்டிகளில் இன்றும்

காணப்பெறும் காட்சியாகும். குன்றிலிருந்து அரிய யானைப் போர் கண்ட திருவள்ளுவர் இந்த ஆட்டுக்கடாச் சண்டை யையும் கண்டிருப்பார். ஓரிரு முறை மோதி முட்டிய கடா மெல்லமெல்ல பின்னுக்குச் செல்லும். அவ்வாறு பின்னுக்குச் செல்வதை அதன் அச்சமாக, நடுக்கமாக, தோல்வியாக எண்ணி விடக்கூடாது. எவ்வளவு சேய்மை பின்னுக்குச் சென்றதோ அவ்வளவு வேகமாக விரைந்தோடி வந்து மாற்றுக்கடாவை முட்டித் தகர்த்துவிடும். நீளத்தாண்டல், அகலத்தாண்டல், உயரத் தாண்டலில் இந்த உத்திகள் பயன்படுவதை நாம் விளையாட்டு அரங்குகளில் கண்டு களித்துள்ளோம்.

ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து 486

'ஆழம் அறிந்து காலை இடு' என்பது ஒரு பழமொழி. அவரவர்க்கு உரிய இடம் அவரவர்க்கு வாழும் இடம், அவரவர் அறிந்த இடம் அவரவர்க்கு ஆற்றல் வாய்ந்த இடமாகும். இப்போதுகூட ஒரு தெருவில் சென்று அடிபட்ட மாணவன் 'டேய்! வாடா எங்கள் தெருவிற்கு ஒரு கை பார்க்கிறேன்' என்று வஞ்சினம் கூறிக்கொண்டு செல்வதைப் பார்க்கிறோம் அல்லவா? அவ்வாறே நரியைவிட பலமடங்கு ஆற்றலும் தோற்றமும் உடைய யானை ஒன்று கால் ஆழும் சேற்று நிலத்தில் சென்று சிக்கிக்கொண்டால் நரிகள் பல அதனைச் சுற்றிச்சுற்றி வந்து அலைக்கழித்துச் சோர்வுறச் செய்து மெல்ல மெல்ல கீரிக் கடித்துத் தின்றுவிடும்.

கால்ஆழ் களரின் நரிஅடும் கண்அஞ்சா
வேலாள் முகத்த களிறு. 500

எனவே, ஒரு போட்டியில், தேர்தலில் நிற்கும் தலைவன் தான் வெல்லத்தக்க தொகுதி இது என்று அறிந்து நிற்க வேண்டும். நான் பெருந்தலைவன், எங்கு நின்றாலும் வெல்வேன், எவரையும் வெல்வேன் என்று தன் திறமை, செல்வம், படிப்பு, தன்னைச் சார்ந்தோர் பலத்தை நம்பி மாறான இன்னொரு தொகுதியில் நிற்கக் கூடாது. அப்படி நிற்பின் தான் தனக்கு எவ்வகையிலும் தகுதியில்லாத மாற்றானிடம் தோற்க நேரிடும்.

பண்டைய போர்களில் பயன்படுத்திய படைகள் காலாட்படை, தேர்ப்படை, குதிரைப்படை, களிற்றுப்படை என நால்வகை படைகளே ஆகும். இவற்றுள் களிற்றுப்படையே ஆற்றல் மிக்கது. ஆற்றைக் கடக்கவும், மாற்றார் மதிலைப் புடைக்கவும், நிலைத்து நின்று போரிடவும் வல்லவை அவை.

அவ்வாறே எத்தனைத் துன்பங்கள் வந்தாலும் தளராது பல அம்புகளும் ஈட்டிகளும் தாக்கினும் தளராது நின்று வெல்லும் நெஞ்சுரன் தளரா ஊக்கம் உடையவர்க்கே உண்டு.

அத்தகைய பரிய, கூரிய கோட்டினை உடைய யானையும் தன்னினும் உருவில் சிறிய ஆனால் ஊக்கத்தில் மிகுந்த புலியின் முன்னர் அஞ்சும்.

எனவே தாங்கும் போரில் யானையைப் போலும் தாக்கும் போரில் புலியைப் போலும் ஒரு படைத் தலைவன், கட்சித் தலைவன் ஊன்றி உறுதியாக நின்று நெஞ்சம் தளராமல் தன் கொள்கையை நிலைநாட்ட வேண்டும்.

சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதையம்பில்
பட்டுப்பா டூன்றும் களிறு. 597

பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின். 599

ஒரு சொல் வல்லான் முன் ஒரு நெஞ்சுரம் மிக்க பெருமிதத் தலைவன்முன் நூறு கோழைகள், திறமான புலமையற்றோர் எதிர்த்து நின்றாலும் வெல்ல இயலாது. கடல்போல் திரண்டு எலிகள் அலைபோல் ஓசையிட்டாலும் ஒரு நாகப்பாம்பின் சீறலுக்கு முன் அவற்றால் நிற்க இயலாது. ஏன் எனில் கூடி நின்றாலும் அவற்றில் உள்ள ஒவ்வொன்றின் உள்ளும் அச்சமும் கோழைமையும் இருப்பதனால். அதுபோலக் கோழைகள் பெருமிதம் மிக்க தலைவனைக் கண்ட உடனேயே தனித்தனியே அருகில் இருப்பவரிடம் சொல்லிக் கொள்ளாமல் பிரிந்தோடி விடுவர்.

ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும் 763

அணிகளுள் பிறிதுமொழிதல் அணி பொதுநிலை உத்திக்கு மிகவும் உகந்தது

நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி ஆகிவிடும் 476

என்ற குறள் வலியறிதல் என்னும் அதிகாரத்தில் அமைந்துள்ளது.

ஒருவர் தன் உடல் ஆற்றல், மன ஆற்றல், உறவாற்றல், துணையாற்றல் இவற்றின் எல்லையறிந்து கொண்டு அந்த எல்லை அளவில் ஊக்கம் கொண்டு ஒரு செயலாற்ற வேண்டும். அந்த எல்லை கடந்து ஊக்கின் அழிவுதான் நேரும்.

இந்தப் பொது உண்மையைத் தனி வாழ்வில், சமுதாய வாழ்வில், அரசியல் வாழ்வில் பல நோக்கில் பயன்படுத்திப் பயன் பெறலாம்.

தொழிலாளர்க்கும் அரசியலாளர்க்கும் இடையே நிகழும் போனசு பற்றிய பேச்சு வார்த்தை

உழவன் பயிருக்கு இடும்எருவின் அளவு.

கணவன் மனைவிஇடையே தோன்றும் ஊடல்

நண்பர்களுக்கு இடையே அமையும் நட்பு.

கூட்டணி கட்சிகளுக்கு இடையே அமையும் கூட்டணி அரசு, இப்படிப்பல.

பொதுநிலை உத்திகளில் திருவள்ளுவர் பிறிதுமொழிதல் அணிகளை 475, 476, 483, 495, 496, 500, 599, 763 ஆகிய குறள்களில் கையாண்டு பலதுறைக்கு, கற்பார்தம் கால, இடச் சூழலுக்கும், கற்பனைக்கும் ஏற்பப் பொருள் கொள்ளுமாறு அமைத்துள்ளார்.

''வலியறிதல், காலமறிதல், இடமறிதல் என்னும் அதிகாரங்களில் ............ வேறு எந்தப் பகுதியிலும் இல்லாத அளவிற்கு இந்தப் பகுதியில் பிறிது மொழிதலாகக் கருத்துக்களை அமைத்துள்ளார் ........

இக்காலத்து அமைச்சர் குழுவின் தலைவர் அரசாங்கத்தை நடத்தும் பொறுப்பை ஆராய்ந்தால், அது ஒருவகைக் கருத்துப்போர் முறையாக இருக்கின்றது. செய்யும் ஒவ்வொன்றும் பாராளுமன்றத்தாரின் கருத்துப் போரில் வெற்றிபெற வேண்டும்; எதிர்ப்பைக் குறைக்க வேண்டும். இந்தக் கருத்துப்போர் நிகழாத நாடு (உலகில்) இப்போது இல்லை ......... முதலமைச்சராகிய ஆட்சித் தலைவர் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் வலிமை அறிந்து, காலம் அறிந்து, இடம் அறிந்து ஒழுக வேண்டும் என்று பொருள் உணரலாம். இதனோடு மற்ற வாழ்க்கைத் துறைகளுக்கும் பொருந்தப் பொதுப் பொருளும் கொள்ளலாம்."

- டாக்டர் மு. வரதராசன், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், பக். 126, 128.

# பொதுநிலை உத்திவழி சொல்லாட்சி

"உரைநடையில் ஆளப்படும் சொற்களுக்கும் பாட்டில் ஆளப்படும் சொற்களுக்கும் வேறுபாடு இல்லை. புலவர் அந்தச் சொற்களை ஆளும் முறையில்தான் வேறுபாடு உள்ளது. ஒவ்வொரு சொல்லுக்கும் நேரான பொருள் ஒன்று உண்டு; அல்லாமல் வழிவழியாக அந்தச் சொல் ஆளப்படும் இடங்களின் தொடர்பால் அதனுடன் சேர்ந்தமைந்த கருத்துக்கள் உண்டு; அச்சொல்லுக்கென ஒலித்தன்மை ஒன்று உண்டு.........

உரைநடையில் சொல்லை ஆளும் புலவர் நேர் பொருளையும் தொடர்பான சில கருத்துக்களையும் பொருட்படுத்தி ஆளுகிறார்.

ஆனால் பாட்டில் சொற்கள் அமையும் போது, வன்மையான உணர்ச்சி வேண்டிய இடத்தில் வன்மையான சொற்களும், மென்மையான உணர்ச்சி வேண்டிய இடத்தில் மென்மையான சொற்களும், இனிமையும் அழகும் மிக்க இடங்களில் நயமான சொற்களும் வந்து அமைகின்றன."

சிலசொற்கள் ஒன்றோடொன்று சேர்ந்து அமையும் வகையாலே, முன்பு அச்சொற்களில் இல்லாத புதிய ஒலியின்பமும் புதிய பொருளுணர்ச்சியும் ஏற்படுகின்றன

உயர்ந்த உணர்ச்சி நிலையின்போது கவிஞர்க்குத் தாமாகவே தக்க சொற்கள் வந்து அமைந்து ஏற்ற பொருளையும் ஒலியையும் பயந்து நிற்கும்"

- டாக்டர் மு. வரதராசன், இலக்கியத்திறன்,
பக். 186, 187, 190, 191, பாரிநிலையம், சென்னை, 1966.

திருக்குறளுக்குப் பல உரைகள் எழுந்துள. அவற்றுள் பின்வரும் பதின்மர் உரைகளைச் சிறப்பித்து நினைவுகூர்வர். அவர்கள்:

தருமர் மணக்குடவர் தர்மதத்தர் நச்சர்
பரிமே லழகர் பருதி - திருமலையர்
மல்லர் பரிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்கு
எல்லையுரை கண்டார் இவர்

இவர்களைத் தொடர்ந்து உரைபல தோன்றின; தோன்றிக் கொண்டுள்ளன. திரு.வி.க. பாவேந்தர் பாரதிதாசன், புலவர் குழந்தை, பன்மொழிப்புலவர், கா. அப்பாதுரையார், கோ. வடிவேலு செட்டியார், கலைஞர் மு. கருணாநிதி இவர்கள் சிலர்.

மேலும் டாக்டர் இரா. அருளப்பா, இராஜா செட்டியார், காமாட்சி சீனிவாசன், டாக்டர் பொன். கோதண்டராமன், டாக்டர் மு. கோவிந்தசாமி, டாக்டர் இ. சுந்தரமூர்த்தி, டாக்டர் வ.சுப. மாணிக்கம், டாக்டர் தி. முருகரத்தினம், டாக்டர் கோ. சாரங்கபாணி, ப. முருகன், டாக்டர் கு. மோகனராசு, டாக்டர் மு. வரதராசன் முதலியோர் பல நோக்குகளில் வள்ளுவரைக் கண்டு, உணர்ந்து, நூல்கள் கட்டுரைகள் இயற்றியுள்ளனர்.

இன்றும் வள்ளுவர் கண்ட சட்டமும் நீதியும் குறித்து பி.ஆர். பக்கிரிசங்கர், வள்ளுவர் கண்ட அரசியலும் மனுவும் குறித்து டாக்டர் கோ. சுப்பிரமணியன், வள்ளுவர் கண்ட இறைவனும் வடநூல் மரபும் என்பது பற்றி டாக்டர் கோ. சுந்தரமூர்த்தி , திருவள்ளுவரும் கிரேக்க அரசியல் சிந்தனையாளர்களும் குறித்து பேரா. பா. சூரியநாராயணன் முதலியோரும் பல துறைகளில் ஆராய்ந்துள்ளனர்.

இவ்வாறு பல சிந்தனைகளுக்கு இடம் தருமாறு சொற்களை, தொடர்களை, கருத்துக்களைக் காய்தல் உவத்தல் இன்றித் திருவள்ளுவர் தம் திருக்குறளில் அமைத்திருத்தல் வழி அவரது பொதுநிலை உத்தியை உணரலாம்.

ஊர்களையும் இடங்களையும் கூடப் பொதுச் சொற்களாலேயே குறிப்பிடுகிறார். ஊர் (குறள். 397, 1008, 1129, 1130, 1142, 1143, 1150, 1158), பதி (குறள். 1015, 1229), உள்ளூர் (குறள். 216), நடுவூர் (குறள். 1008), மன்று (குறள். 820, 1138, 1254), மறுகு (குறள். 1139), அரங்கு (401), அவை (711, 67, 332), கழகம் (935, 937) இவ்வாறு குறிப்பிட்டு அறிய இயலாதவாறு கூறுவது அவரின் பொதுநிலை உத்தி நோக்கைப் புலப்படுத்துகிறது.

"ஆள் பாதி ஆடை பாதி" என்பது பழமொழி. நடை உடை பாவனை இவற்றின் வழி ஒருவரை இனங்காண இயலும். ஆனால் ஆடை பற்றி அவர் குறிப்பிடும் எல்லாச் சொல்லும் பொதுவாக அமைந்துள்ளனவே, அன்றி ஒரு காலத்தார், ஒரு நாட்டார், ஒரு இனத்தார் என்று வேறுபாடு காட்டக்கூடிய

*சொற்களை அவர் வரையவில்லை. உடுக்கை, உடை, குறள். 788, 166, 1079, 939, 1012, துகில், படாம். 1087;*

உண்ணும் உணவின் பெயர்களாலும் உண்ணுவோரை, உணவைச் சிறப்பித்து இடம்பகுத்து ஓரிடத்தார்க்கு, ஒரு நாட்டார்க்கு என வரையறை செய்துவிடலாம். ஆனால் குறளில் குறிப்பிடப்படும் உணவுகள் தேன், பால், கள், புலால் என்பனவே. இவை உலகம் அனைத்தும் மேற்கொள்ளும் உணவுகளே. உணவை உண்ணும் நெறிபல கூறுகிறார். அவற்றிலும் இவரை இன்னார் என இனங்கண்டு கொள்ள இயலாது.

*தூய்மையான உணவு துப்பாய துப்பு : 12*
*அருந்தியது அற்றது போற்றி உண் : 942*
*அற்றால் உண், அளவறிந்து உண் : 943*
*மாறல்ல துய்க்க : 944*
*துய்க்க துவரப்பசித்து : 944*
*மாறுபாடில்லாத உண்டி மறுத்து உண் : 945*
*இழிவறிந்து உண் : 946*
*தீ அளவு அறிந்து உண் : 947*

இன்ன மரம் என்று பெயரிட்டுக் கூறாமல் இத்தகைய மரம் என்று பயன்பற்றிக் கூறும் வகையில் பொதுமைத் தன்மையை நிலை நாட்டுகிறார்.

*கனி தரும் மரம் : 216*

*மருந்தாகும் மரம் : 217*

*நச்சு மரம் : 108*

*முள் மரம் : 279*

*வற்றிய உலர்ந்த மரம் : 78*

திருவள்ளுவர் பெய்துள்ள சொற்கள் பல தக்க பலபொருள் தருவதாய், காலத்திற்கெல்லாம் உரிய பொருள் தருவதாய், பொருள்தருவதில் நெகிழ்ச்சி உடையதாய், பல பொருட்களை நுண்மையாய் உள்ளடக்கியதாய் அமைந்துள்ளன

தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தால் காணப் படும். *(114)*

என்ற குறளில் செய்யப்பெற்றுள்ள 'எச்சம்' எனும் சொல் மக்களை, மாணவர்களை, நூல்களை, அறக்கட்டளைகளை,

கோயில் குளங்களை, இப்படிப் பல பொருள்களை உள்ளடக்கிய தாய் விளங்குதலை அறியலாம்.

"நயன், அன்பு, அறிவு, அளவு, சிறப்பு, ஏற்கம், அமைவு, குடி, மடி, எண், பதம், கலன், படி, குறை, ஆறு, அலகு, சான்றோன், இறத்தல், ஆழி, அற்றார், கை, தக்கார், தார், ஊராண்மை, பொறி, இறை, வெளிறு, சிறுமை எனவரும் நூற்றுக்கணக்கான தனிச்சொற்கள் பலபொருட்கு இடந்தந்து பலகால, பல இடத்தவர்க்கு உகக்கப் பொருள் தந்தன.

- மாணிக்கம், வ.சுப. திருக்குறட்சுடர், பக். 70, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1987.

இவ்வாறே திருவள்ளுவர் குறிப்பிடும் இயல்புடைய மூவர், அறுதொழிலோர், எழுமை, ஏழுபிறப்பு, ஐந்தவித்தான், எண்குணத்தான் முதலிய தொகைச் சொற்களும் பொருள் நெகிழ்ச்சிக்கு இடந்தருவன.

எடுத்துக்காட்டாக இயல்புடைய மூவர் (49) என்னும் தொகைச் சொற்கு மணக்குடவர், பரிமேலழகர், பரிதி, காளிங்கர் ஆகிய உரையாசிரியர் பிரமசரியன், வானப்பிரத்தன், துறவி எனப் பொருள் உரைத்துள்ளனர்.

ஆனால் வ.உ.சி. தாய் தந்தை தாரம் என்பர்.

திருவி.க. சேர சோழ, பாண்டிய மூவேந்தர்கள் என்பர்

நாமக்கல்லார் உறவினர், நண்பர், ஏழைகள் என்பர்.

புலவர் குழந்தை துறந்தார், துவ்வாதார், இறந்தார் என்பர்.

சிலர் பார்ப்பார், அரசர், வணிகர் என்பர்.

# கடவுட் கொள்கை

ஒன்றே பொருளென்னின் வேறென்ப; வேறெனின்
அன்றென்ப ஆறு சமயத்தார் - நன்றென
எப்பாலவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி.

இந்திய தத்துவஞான ஆராய்ச்சியில் அமைந்த நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், பூர்வமீமாம்சம், உத்தரமீமாம்சம் எனும் வைதிக சமயப் பிரிவுகள் ஆறு; சைவம், வைணவம், கௌ மாரம், காணாபத்யம், சாக்தம், சௌமாரம் எனும் மற்று ஆறு இந்து சமயங்கள் மட்டுமின்றிப் பிற உலகச் சமயக் கொள்கை களுக்கும் இயையுமாறு திருவள்ளுவர் தம் திருக்குறளில் சமய உண்மைகள் உள என்பர் மேற்குறிப்பிட்ட திருவள்ளுவமாலை வெண்பா பாடிய புலவர்.

> "திருவள்ளுவரின் பொதுமை நிலை தற்கால உலகின் சமயங்களுக்குரிய சமரச மனப்பான்மையன்று. ஏனெனில் திருக்குறள் சைவர்களாலும் வைணவர் களாலும், இவர்களினும் ஆர்வமாகச் சமணர் களாலும், புத்தர்களாலும், கிறிஸ்துவர்களாலும், முஸ்லீம்களாலும் தங்கள் தங்கள் சமயத்துக்கே உரியதென்று வழிகாட்டப்படும் சிறப்பினை உடையது. சைவ, வைணவ பக்தி இயக்கத்தின் அண்மைக்கால இயக்கங்களான சீக்கிய சமயம், கபீர்பரந்த், ராதா சத்சங்கம், கோரக்பாந்த் ஆகியவை கூட இந்தப் பொதுமை நிலையை ஏற்று வாதாடு கின்றன."

- டாக்டர் க. அப்பாதுரையார்,
திருக்குறள் புத்தாய்வு முன்னுரை, ப. 11

"இவ்வாறு டாக்டர் அருளப்பா உலக சமயங்களின் கருத்துக்களை ஏசுநாதர் மூலமாகவும், கிறித்தவ சமயம் மூலமாகவும் காண்கிறார். ஏனெனில் கிறித்தவ சமயமே அவர் தேர்ந்த கொண்டசமயமாகும். இது போலவே நானும், நான்

தேர்ந்து கொண்டஎன் ஆத்ம சமயமான சைவ சமயம் மூலமே எல்லா உலக சமயங்களின் அடிப்படையையும் காண்கிறேன்.

> எடுத்துக்காட்டாக, திருக்குறளின் முதல் மூன்று அதிகாரங்கள் தந்தையாகிய கடவுள், தூய ஆவியாகிய கடவுள், புதல்வனாகிய கடவுள் என்ற கடவுளின் மூவொருமை வடிவங்களைப் பரவுகின்றன. இஃது உண்மையில் புராணகால சமயத்தில் அழிப்புக்கடவுளாகிய சிவன், பாதுகாப்புக் கடவுளாகிய திருமால், படைப்புக் கடவுளாகிய நான்முகன் ஆகியவற்றுடன் ஒப்பாகும். இதுவே இன்றும் பழைமையான சைவ சமயத்தின் தந்தை சிவபெருமாள், தாய் உமாதேவி, புதல்வன் முருகன் ஆகிய மும்மையுடன் இன்னும் நெருங்கிய பொருத்தமுடையது ஆகும். இந்த சைவ மும்மை உண்மையிலேயே இறைக் குடும்பத்தின் மிகப் பழைய வடிவத்தை நன்கு காட்டுவதாகும். சூபீ (இஸ்லாமிய மறைஞானி) உமர் கையாம் இந்த இறை மும்மையைப் பெண் (தந்தை இறைவன்), மதுக் கிண்ணம் (தூய ஆவியாகிய கடவுள்), திரு ஏரு, அஃதாவது வேதம், அஃதாவது விவிலிய நூலில் கூறப்படும் 'சொல்' என்ற கடவுள் புதல்வன் என்று கூறியுள்ளார்".
>
> - முனைவர் கா. அப்பாதுரையார்,
> திருக்குறள புத்தாய்வு, முன்னுரை, பக். xiii - xiv.

பொதுவாக இறைபற்றிய அடிப்படைக் கருத்துக்கள் இறைவன் என்றும் உள்ளவன் இறைவன் எங்கும் உள்ளவன்; இறைவன் பேராற்றலாய் உள்ளவன்; இறைவன் பேரறிவாய் உள்ளவன் என்பன எனச் சமயத் தத்துவ அறிஞர்கள் முடிவுக்கு வந்துள்ளனர்.

> அங்கிங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய்
> ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நின்றது எது
> எங்ஙனம் பெருவழக்காய் யாதினும் வல்லஒரு சித்தாகி
> என்றைக்கும் உள்ளது எது.

இறை, உயிர் பற்றிய கொள்கைகளில் திருவள்ளுவர் அடிப்படை உண்மைகளுக்கே தம் நூலில் அழுத்தம் தந்து உரைத்துச் செல்கிறார். வேறுபாடுகள் கடவுள் ஒருமை பன்மையிலும், அருவ உருவ அருஉருவ வடிவங்களிலுமே சமயக்

கணக்கர்கள் மதிவழி வேறுபடுகின்றன. மேலும் ஒருருவம் ஒரு நாமம் இல்லார்க்கு ஆயிரம் பேர் வைத்தல் பல சமய மரபாக உள்ளது. திருவள்ளுவரோ இறைவனை அவன் இருப்புநிலை, இயக்கநிலை, இயல்புநிலை இவற்றின் வழியே குறிப்பிடுகிறார். 'கடவுள்' வாழ்த்தாக அமைந்துள்ள முதல்அதிகாரத்தில் கடவுள் என்ற சொல்லே இல்லை என்பதை அனைவரும் அறிவர். கடவுள் என்ற சொல் சங்க இலக்கியங்களில் தொல்காப்பியத்தில் இடம்பெறினும் (புறம் 52.12-13,158. 11-12, 106. 2-3) (தொல் பொருள். 83, 88) திருவள்ளுவர் அச்சொல்லை ஏற்காதது எண்ணத்தக்கது. ஆலமர் கடவுள், காமப் பகுதி கடவுளும் வரையார் ..... என்னும் தொடர்கள் கடவுளுக்கு எல்லைகட்டி விடுவதால் திருவள்ளுவர் அச்சொல்லைப் போற்றி மேற் கொள்ளாதது அவர்தம் பொதுமை உத்தியின் நோக்கமே ஆகும்.

கடவுளைக் குறிப்பதாக ஆதிபகவன், இறைவன் என்னும் இரு சொற்களையே முதல் அதிகாரத்தில் திருவள்ளுவர் கையாண்டுள்ளார். 'ஆதிபகவன்' என்னும் சொல்லின் பொருளாகத் 'தொழத்தக்க என்றுமுள்ள பொருள்' என்பர் (The Eternal Adoratle one) என்பது அருட்தந்தை போப் அவர்களின் மொழிபெயர்ப்பு. இறை என்ற சொல் தலைவன் என்ற பொருளையும், இரு + அன் எங்கும் தங்கியுள்ளவன் என்ற பொருளையும் குறிக்கும் என்பர் (திரு.வி.க.). திருவள்ளுவர் அரசனையும் இறை என்ற சொல்லால் குறிப்பிடுகிறார்.

"இறுத்தல் என்பது எங்கும் இருத்தல், கசடு நீங்கும்படி வட்டித்தல், வரி பிரித்தல் என்னும் மூன்று பொருள்களை உடையது. இரண்டாவது பொருள் உண்மையில் எங்கும் பரவிவிடுதல் என்பதே. கடவுள் வகையில் இது எங்கும் ஊடுருவி இருத்தலையும் எங்கும் பரவி இயக்குதலையும், எல்லாவற்றையும் தன்னை நோக்கி ஈர்த்தலையும் குறிப்பது ஆகும். அரசன் வகையில் இது எங்கும் ஆற்றலாகப் பரவி இருத்தலையும் எல்லாவற்றையும் ஆணையால் இயக்குதலையும் எல்லாரிடமிருந்தும் இறை (வரி) பிரித்தலையும் குறிக்கும் (திருக்குறள் உரை. குறள் 5, கா. அப்பாதுரை).

முதல் அதிகாரத்தில் இறைவனின் இயல்புகளைச் சுட்டுவனவாகப் பின்வரும் ஏழு தொடர்களைத் திருவள்ளுவர் குறிப்பிடுகிறார் வாலறிவன் (2), மலர்மிசை ஏகினான் (3), வேண்டுதல் வேண்டாமை இலான் (4), பொறிவாயில் ஐந்தவித்தான் (6), தனக்குவமை இல்லாதான் (7), அறவாழி அந்தணன் (8) எண்குணத்தான் (9) என்பனவே அவை.

வாலறிவன், மலர்மிசை ஏகினான், தனக்குவமை இல்லாதான், அறவாழி அந்தணன், எண்குணத்தான் என்னும் தொடர்கள் பேரறிவினன், நினைப்பவர் நெஞ்சில் நிகழ்பவன், ஒப்பற்றவன், அறவோன், என இறைவனையே சுட்டுவனவாகக் கொள்ளலாம். ஆனால் வேண்டுதல் வேண்டாமை இலான், பொறிவாயில் ஐந்தவித்தான் என்னும் தொடர்கள் இறைவனைச் சுட்டுவதில் ஐயப்பாடு எழுப்பப்பெற்றுள்ளது. அவை இறைக் காட்சியராகிய குருமார்களைச் சுட்டும் என உரைக்கப் பெற்றுள்ளது. ஆனால் குருவைக் கடவுளாகக் குறிப்பிடும் நிலை குறளில் எங்கும் காணப்பெறவில்லை.

'எண் குணத்தான்' என்ற தொடருக்கு எட்டுக் குணங்களை உடையவன் எனக் கொண்டு பரிமேலழகர் 'தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவில் ஆற்றலுடைமை என எண்குணங்களைக் குறிப்பர். ஆனால் பரிதியார் இறைவனின் எட்டுக் குணங்களாகப் பின்வருவனவற்றைக் குறிப்பர். அனந்த ஞானம், அனந்த வீரியம், அனந்த குணம்,அனந்த தரிசனம், காமம் இன்மை, கோத்திரம் இன்மை, அவா இன்மை, அழியா இயல்பு ஆகிய எட்டினைக் குறிப்பர்.

'எண்' என்னும் சொல்லை இவ்வாறு பெயர்ச்சொல்லாகக் கொள்ளாமல் வினைச் சொல்லாகக் கொண்டு திரு.வி.க. அடியாரால் எண்ணப்படும் குணங்களை உடையவன் என்றதைச் சிறப்பாகக் கொண்டார். 'எண்' எனும் சொல்லுக்குப் பண்படியாகவும் பொருள்காணலாம் எனக்கருதி கா. அப்பா துரையார் 'எளிமை' என்று பொருளும் கொள்ளலானர். எண் பொருளவாகச் செலச் சொல்லி (424) எண்பதத்தான் ஓராமுறை செய்யா மன்னவன் (548) எண்பதத்தால் எய்தல் எளிது (991) என்னும் குறட்பாக்களில் இடம்பெறும் 'எண்' எனும் சொல் 'எளிய' என்றும் பொருள் உடைமை இங்குக் கருதப்பெறும்.

"உயிரின் அனுபவமே வாழ்வு என்று அறிந்துள்ளோம். வாழ்வைப் பற்றி விளக்கம் செய்ய எண்ணிய பெரியார் உயிர் மூலம், உயிர், உயிர்ப்பயன் மூன்றையும் முதல் மூன்று குறளில் விளக்கியுள்ளார்.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

என்பதே முதற்குறள். இக்குறள் மூலம் உயிருக்கும் உலகுக்கும் மூலமான இருப்பாற்றல் நிலை-மெய்ப்பொருள் நிலை - விளக்கப் பெற்றிருக்கிறது. இருந்த, எழுந்த, படர்ந்த மூன்று நிலைகளுக்கும் இருந்த நிலையேதான் மூலம். அந்த நிலையை முதலாகக் கொண்டு எழுந்தவையே உயிரும், உலகும் எனக் கூறியுள்ளார். எந்த மொழி ஆனாலும் "அ" என்ற எழுத்தை முதலாகக் கொண்டே மற்ற எழுத்துக்கள் எல்லாம் அமைந்திருப்பன போன்று ஆதியாகிய தெய்வநிலையை முதலாகக் கொண்டே உலகும் இருக்கிறது என்ற குறிப்புக் காட்டுகிறார்.

"ஆதி என்ற சொல் முதன்மை நிலையை விளக்குவ தாகும். இருப்பாற்றலாகி மெய்ப்பொருள் எல்லாத்தோற்றங் கட்கும், இயக்கங்கட்கும் இம்மூல நிலையாக இருப்பதால், அதனைச் சிறப்பு மொழியால் மூலமான எல்லையற்ற ஒன்றாக விளக்க "பகவன்" என்று மொழிந்துள்ளார். ஆகவே, ஆற்றலும் ஆற்றல் செறிவு நிலைகளுமாக உள்ள உலகம் மெய்ப் பொருளாகிய இருப்பாற்றலின் மலர்ச்சியே என்று அறுதியிட்டுக் கூறுகின்றார்.

"முதல் குறளில் இருப்பாற்றலாகிய தெய்வநிலையை விளக்கிவிட்டார். வாழ்வைப் பற்றிச் சிந்திக்க வேண்டியவர்கள், உணர்ந்து நிற்க வேண்டிய இடத்தை நினைவுபடுத்திவிட்டார்.

- யோகிராஜ் வேதாத்திரி மகரிஷி,
திருக்குறள் உட்பொருள் விளக்கம் பக். 12, 13

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

உயிர் மூலத்தை உயிரை அதன் சிறப்பாற்றலாகிய அறிவைக் கொண்டே அறிதல் கூடும். அது புத்தகப் படிப்பால் இயலாது, அறிவின் களமான உயிரையும் முடிவான மெய் நிலையையும் அந்நிலையுணர்ந்த ஆசான் மூலம் அகநோக்கப் பயிற்சி பெற்று அறிவைக் கொண்டே உணர்ந்து இணைந்து பயன்பெற வேண்டும் என்பர் மகரிஷி

மூன்றாவது குறளாகிய

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்"

பேரியக்க மண்டல விரிவை விளக்குவதாக மகரிஷி காண்கிறார்.

இருப்பாற்றல் இயக்க ஆற்றலாகிய நிலையை இக்குறள் குறிப்பது என்பது மகரிஷியின் கருத்து. இருப்பாற்றல் இயக்க

விரைவால் விண் ஆகி, விண் என்னும் நுண் அணுக்களின் திரட்சி மண் முதல் ஐந்து பூதங்களாகி இவற்றின் இணிவுகளுக்கு ஏற்ப நாற்றம் முதலிய ஐந்து தன்மாத்திரைகளாகி உயிராகி, அறிவாகி, மனமாகி தெய்வமாய் உள்ளது என்பது மகரிஷியின் விளக்கம்.

திருக்குறள் பாயிர, கடவுள் வாழ்த்தில் அமைந்துள்ள இந்த முதல் மூன்று குறள்கள் வழி மூலமாகிய இருப்பாற்றல் (இயற்கையின் ஒழுங்கமைப்பு, தெய்வம்) உயிர், அறிவு என்னும் மூன்று மறைபொருட்களையும் விளக்கிவிட்டார்.

வேண்டுதல் வேண்டாமை உயிரின் மூலமாகிய தெய்வத்திற்கு இல்லை. அகத்தலத்தால் விருப்பு வெறுப்பு என்னும் கலிங்கங்கள் அற்று பரம்பொருள் நினைவில் நிலைத் திருப்பவர்களைக் குருவாகக் கொண்டு அவர்வழி வாழ்வார்க்குத் துன்பம் இல்லை எனப் பொருள் காண்கிறார்.

இருள்சேர் இருவினை நல்வினை தீவினை அன்று. தீமை தரும் போயபிழையும் புகுதருவான் நின்றனவுமாகிய முன்வினை பின்வினை இரண்டும் என்பர்.

'நீடு வாழ்வார் என்ற தொடர் ஒரு மனிதன் உருவத்தைப் பற்றியது அன்று. அவர் செய்த நல் விளைவுகள்' என்பது இவர் விளக்கம். அந்த விளைவுகள் மக்களுக்கு வழிகாட்டி நீண்ட நாட்கள் வாழ்விக்கும் அல்லவா?

குறள் கூறும் சமயம் என்னும் தம் நூலில் வள்ளுவர் எச்சமயத்தைச் சேர்ந்தவர் என ஒரு வினா எழுப்பி அவர் நூலில் பல சமயக் கருத்துக்கள் உள்ளன. ஆனால் அவர் அந்த எச்சமயத்தையும் சேர்ந்தவர் அல்லர் எனத் தெளிவு செய்கிறார். அவர் கண்ட கருத்தின் அடிப்படையில் இங்கே சில கருத்துக்கள் இந்த இயலின் முடிவுரையின் கீழே குறிப்பிடப்படுகின்றன.

வள்ளுவர் சமண சமயத்தைச் சேர்ந்தவர் என்றும் 'ஆதிபகவன்' என்று குறிப்பிடப்படுவது முதல் தீர்த்தங்கரரான இடபதேவரே என்றும் மலர்மிசை நடந்தான், வேண்டுதல் வேண்டாமை இல்லான், தனக்கு உவமை இல்லான் என்னும் தொடர்கள் ஒரு பற்றற்ற துறவியையே குறிக்கிறதென்றும் கூறி வள்ளுவர் சமணரே என்று வாதிடுவர். அப்படியே பௌத்தரும் ஐந்தவித்தான், அறவாழி, மலர்மிசை ஏகினான் என்ற தொடர்களும்; எண்குணம் புத்தரால் கற்பிக்கப்பெற்ற நற்காட்சி, நல்வாய்மை முதலிய எட்டு உறுப்புக்களையுடைய அட்டாங்க மார்க்கத்தைக் குறிப்பதாகவும் கொள்வர். மேலும் கடவுள்

வாழ்த்து, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் மூன்றும் பௌத்தர்தம் மும்மணிகளான புத்தம், சங்கம், தர்மம்-ஒத்து உரைக்கும். மேலும் பௌத்தர் தம் ஐவகைச் சீலங்களாகிய பிறனில் விழையாமை, கொல்லாமை, கள்ளுண்ணாமை, வாய்மை, கள்ளாமை - சிறப்பாகத் திருக்குறளில் இடம் பெற்றுள்ளமையையும் பௌத்தர் தம் நால்வகை வாய்மை களுடன் அவா பற்றி வள்ளுவர் கருத்துப் பெரிதும் ஒத்திருத் தலையும் குறிப்பர். மேலும் 'தம்மபதம்' என்னும் பௌத்த நூலில் இடம்பெறும் கருத்துக்கள் சில குறள் கருத்துக்களுடன் ஒத்திருத்தலையும்' சுட்டுவர்.

ஆனால் கடவுள் வாழ்த்தில் இடம்பெறும் 'ஆதிபகவன்' என்ற தொடர் புத்தர் அல்லது இடபதேவர் முதலான சமயத் தலைவரைக் குறிக்குமா! வள்ளுவர் கூறும் அறங்கள் பல சமண, பௌத்த சமயங்களுக்கு மட்டுமே அன்றி வைதிக சமய நூல்களிலும், யோக நூல்களிலும் கூடக் காணப்பெறுகின்றன. மேலும், சமணம் பௌத்தம் இரண்டும் இவ்வுலக வாழ்வுக்கு முதன்மை தராமல் துறவுக்கே முதன்மை தந்துள்ளன. ஆனால், வள்ளுவர் வையத்துள் வாழ்வாங்கு வாழ்தலையே தம் 1330 குறள்களிலும் எடுத்துரைத்துள்ளார். எனவே அவரைச் சமண பௌத்த, எல்லைக்குள் நிறுத்திவிட இயலாது.

பகவத்கீதை வலியுறுத்தும் அறநெறிகள், இல்லற துறவற வாழ்வு முதலிய அறவியல் கருத்துக்கள் சில, திருக்குறள் அறவியல் கருத்துக்களோடு ஒத்திருப்பினும் தத்துவ நோக்கில் திருக்குறள் அத்வைத வேதாந்தத்தைக் கொள்ளவில்லை. கீதையில் இடம் பெறும் 'மாயையின் வழி யாவும் உண்டாகின்றன இயங்குகின்றன' என்ற சிந்தனையும் குறளில் இல்லை. மேலும் தாமசம், இராஜசம், சாத்வீகம் என முக்குண அடிப்படையில் பல கருத்துக்கள் கீதையில் சொல்லப்படுகின்றன. ஆனால் அவற்றின் அடிப்படையில் அறங்களை வள்ளுவர் வகுக்கவில்லை.

வள்ளுவர் சைவர் என்ற கருத்துத் தமிழகத்தில் பலரால் பேசப்பெற்றும் எழுதப்பெற்றும் வருகின்றது. சைவ சித்தாந்த சாத்திரங்கள் சிறப்பாகத் திருக்களிற்றுப்படியார் திருக்குறளை ஆங்காங்குக் குறிப்பிட்டுரைக்கின்றது. சைவ சித்தாந்த சிகாமணி திரு. க. வச்சிரவேல் முதலியார் 'திருக்குறள் உட்கிடைக்கை சைவ சித்தாந்தமே' என்ற ஒரு நூலும் எழுதியுள்ளார்.

டாக்டர் ந. சஞ்சீவி, இசுலாமும் சிறிஸ்துவமும் மறு பிறப்பு, வினைத்தொடர் ஆகியவற்றை ஏற்றுக் கொள்வதில்லை.

சமண பௌத்த சமயங்கள் வினைப்பயனை உயிர் நுகருமாறு கூட்டிவைக்கும் கடவுள் பற்றி நம்புவதில்லை. வேதாந்தம் உலகு, உயிர் ஆகியன மெய்ம்மை என ஏற்பதில்லை. வள்ளுவரோ இவையனைத்தையும் ஏற்றுக் கொள்கிறார். எனவே, அவர் இச்சமயங்களைச் சார்ந்தவர் அல்லர். இறைவனை எண் குணத்தான் எனும் வழக்கு வைணவத்தில் இல்லை. எனவே, வள்ளுவர் வைணவரும் அல்லர்; சைவரே என நீக்கல் முறையால் நிறுவுவார். ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை சித்தாந்த நூல்களில் இடம்பெறும் வினைத்தொடர்பு பற்றிய கொள்கைகளையும் திருக்குறளில் வினைத் தொடர்பு பற்றிய கொள்கைகளையும் பற்றி ஒப்பிட்டு உரைத்தார்.

ஆனால், சிவாத்துவைதம் குறளில் கூறப்பெற வில்லை. சித்தாந்தத்தில் விளக்கமுறும் மாயை பற்றிய விவரம் குறளில் இல்லை. கடவுள் அருள், சித்தாந்த வழிபாட்டு முறை குறளில் குறிப்பிடப்பெறவில்லை.

'அவன் அருளாலே அவன் தாள் வணங்கப்பெறும்' என்ற வழக்கு குறளில் காணப்பெறவில்லை. வீட்டு நிலையில் பேரின்பம் இறைவனிடமிருந்தே ஆன்மா பெறுகிறது என்ற சைவசமயக் கருத்தும் குறளில் இடம்பெறவில்லை.

மலர்மிசை ஏகினான் (3) அறவாழி அந்தணன் (8) அடியளந்தான் தாஅய தெல்லாம் ஒருங்கு (616) தாமரைக் கண்ணன் உலகு (1191) என்னும் தொடர்கள் அடிப்படையில் ஆழ்வார்கள் தம் பாடலில் திருக்குறளை, குறட்கருத்துக்களை மேற்கொண்டிருத்தல் நோக்கில் திருவள்ளுவரை வைணவராகக் கொள்வர். ஆனால் மக்கள் வழக்கில் இருந்த கருத்தையும் நம்பிக்கையையுமே வள்ளுவர் இங்குக் கொண்டார் என்பதே சரி. கடவள் வாழ்த்தில் வள்ளுவர் திருமால் பெயரைக் குறிப்பிட வில்லை என்பது நோக்கத்தக்கது.

திருவள்ளுவர் காலத்தில் ஓரளவு பரவி இருந்திருத்தல் கூடும் எனக் கருதப்பெறும் நியாய, வைசேடிக, சாங்கிய, யோக மீமாம்சை எனும் சமயப்பிரிவுகள் ஏதேனும் ஒன்றுடன் திருவள்ளுவரைத் தொடர்புபடுத்தலாமா? என்பதும் கருதத் தக்கது. 'அந்தணர்' நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது மன்னவன் கோல் (543) மறப்பினும் ஒத்துக் கொளலாகும் (134) என வேதநூற் கல்வி குறளில் ஓரளவு இடம்பெறுதலால் வள்ளுவர் வைதிக சமயத்தை ஓரளவு ஆதரித்தவர் எனக் கொள்ளலாமோ எனின்

அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்து உண்ணாமை நன்று (259)

என்ற குறள் உண்மை; வீடுபேறு பற்றிய நியாய, வைசேடிகக் கொள்கைகள் குறளில் இல்லை; வைசேடிகரின் அணுக் கொள்கை, சாங்கியரின் புருடன் பிரகிருதி கோட்பாடு குறளில் இடம்பெறவில்லை. எனவே, ஆறு தரிசனங்களில் எதனையும் திருவள்ளுவர் சார்ந்தவர் அல்லர் எனக் கருதலாம்.

காணப்படும் உலகையே நம்பும், காணப்படாத உயிர், கடவுள், மறுபிறவி, வினைத்தொடர் இவற்றை மறுக்கும் உலகாயதம் தரும் வள்ளுவர் அல்லர்.

கிறிஸ்துவ அருளியல், அன்பியல் கருத்துக்கள் திருக்குறளில் இடம்பெறுவது அடிப்படையில் திருவள்ளுவர் கிறித்தவரே என்ற கருத்து ஒன்று நிலவுகிறது. ஆனால் மறுபிறப்புக் கொள்கை கிறித்துவத்தில் இல்லை; குறளில் உண்டு. மேலும் புலால் உண்ணுதலை, மது அருந்துதலை கிறித்தவம் அனுமதிக்கிறது. ஆனால்,

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும் (260)

ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி (923)

என அவ்விரண்டையும் கடிவர் திருவள்ளுவர். கிறிஸ்து என்ற பெயர் திருக்குறளில் காணப்பெறாமையோடு பிற இந்துத் தெய்வப் பெயர்கள் குறளில் காணப்பெறுகின்றன. எனவே திருவள்ளுவரை கிறித்தவராகக் கருதுவதற்கும் இடம்இல்லை.

எனவே, சமயக் கணக்கர் மதிவழி கூறாது, தாம் கற்ற, கண்ட, கேட்ட, துய்த்து உணர்ந்த சிந்தனைகளின் அடிப் படையில் எக்காலத்தவரும் எந்நாட்டவரும் ஏற்றுக்கொள்ளத் தக்க அடிப்படை இறை உண்மைகளை உரைப்பதையே தம் இறைப் பொதுநிலை உத்தியாகத் திருவள்ளுவர் கொண்டார்.

# அறம்

மன் + இதன் = மனிதன். மன் + அம் = மனம். மனம் தான் மனிதன். மனத்தின் உயர்வே மனிதனின் உயர்வு. மனத்தின் நலமே மனிதனின் நலம். மனத்தின் ஆற்றலே மனிதனின் ஆற்றல்; மனத்தின் பண்பாடே மனிதனின் பண்பாடு. மனமே உலகத்தையும் இறைவனையும் இணைக்கும் பாலம். எனவே மனம் பண்படும் நெறியில் காமத்துப் பாலையும், மனம் பயன்படும் நெறியில் பொருட்பாலையும், மனம் வாழும் வழிகாட்டுவதாக அறத்துப் பாலையும் திருவள்ளுவர் அமைத்துள்ளார்.

"மனத்துக்கண் மாசிலன் ஆதல்" என மனத்தூய்மையை மையமாக வைத்து அறத்துப் பால் எழுதத் தொடங்கும் அவர் நெஞ்சில் அறவாழ்வு அனைத்து மனிதர்க்கும் அனைத்துக் காலத்தவர்க்கும் உகந்ததாக அமைய சில பொது உத்திகளைக் கருவியாகக் கொள்கிறார்.

மனித உயிர் வாழ்வு அன்பின் வயத்தது, 'அன்பின் வழியது உயிர்நிலை.' மனித உயிர் வாழ்வின் பயன் அருட்பேறடைதல், 'அருளென்னும் அன்பீன் குழவி. இந்த அன்பும் அருளும் கால, இட எல்லையற்றது. எங்கும் எவர்க்கும் உரியது. இவற்றின் பயனை உணர்ந்து எல்லோரும் வாழ்தல் வேண்டும். இந்தப் பொதுமை நோக்கில் அறத்துப்பாலைப் பாயிரம், இல்லறம், துறவறம் என மூன்றாகப் பகுத்து, ஒன்றிலிருந்து ஒன்று முகிழ்ப்பதாகத் தொகுத்து அறத்துப்பாலை வழங்குகிறார்.

மனிதன் தன் பிறவியில் பெறவேண்டிய பேறு இறை உணர்வு. அப்பேற்றுக்கு உரிய நெறி இல்லறம். அதன் கனிவு துறவறம்.

இறை இத்தகையன், இன்ன நலத்தன் அந்த நலநெறி, குணநெறி நிற்பதே இறைவழிபாடு என உணர்த்தி, அந்த இறை இயற்கை உணர்ந்து தெளிய, இயற்கையில் எல்லா உயிரும் எல்லாவற்றிலும் துளிர்க்க தழைக்க, அந்த இறை நலத்தையும், இந்த இயற்கை இயல்பையும் உணர்ந்து அறிந்து கொள்ள வழிகாட்டும் நீத்தாரைக் கண்டு, அவர் பெருமை உணர்ந்து, அவர்

வாய்மொழியைக் கேட்டு, அவர் அகத்தவப் பயிற்சியை அவர்வழி இல்லற துறவறத்தை மேற்கொள்வதற்கு ஏற்ற தூய மனத்தினனாக உதவும் அறம் பயின்று வாழவேண்டிய வழியைப் பாயிரத்தின் கண் அமைந்த கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்னும் நான்கு அதிகாரங்களில் பாடிய திருவள்ளுவர், தாம் பாடிய பாடற் கருத்துக்கள் எல்லாம் ஒரு தனி காலத்திற்கு, காலத்தவர்க்கு, ஒரு தனி நாட்டுக்கு நாட்டார்க்கு, ஒரு தனி சமயத்தார்க்கு சமயத்திற்கு, ஒரு தனி இனத்தார்க்கு இனத்துக்கு என்றில்லாமல் அனைத்துக் கருத்துக்களையும் வெள்ளிப் பனிபோலத் தெள்ளத் தெளிவாக அனைவர்க்கும் எடுத்துரைத்துள்ளார்.

பழியஞ்சிப் பாத்தூண் உடைமை, அன்பும் அறனும் உடைய இல்வாழ்வு, அறத்தாற்றின் இல்வாழ்வு, அற இயல்பினான் அமையும் இல்வாழ்வு, ஆற்றின் ஒழுக்கி அறன் இழுக்கா இல்வாழ்வு, அறன் எனப்பட்ட இல்வாழ்வு என இத்தகு இல்வாழ்வு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப் பெறுவான் எனத் திருவள்ளுவர் கூறுகிறார். இந்த வாழ்க்கை இயல்புகள் அனைத்தும் அனைவர்க்கும், அனைத்துக் காலத்தவர்க்கும், அனைத்து நாட்டார்க்கும் பொதுவே அன்றோ? உரியதே அன்றோ?

பெற்றோர், மனையாள், மக்கள் என இயல்புடைய மூவரையும்; துறந்தார், துவ்வாதார், இறந்தார் எனத் தாமே இருந்து உண்ண வாய்ப்பற்ற மற்ற மூவர்க்கும்; தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்ற குடும்ப வாழ்விற்கும் இல்லத் தலைவனே ஆதாரம்; துணை என்ற கருத்தும் தனிமை எனக் கூறுதற்கு இல்லை; இவை ஆங்காங்கு ஒவ்வொரு நிலையில் இல்லறத்தாரால் பின்பற்றப் பெறுவனவே.

குடும்பத் தலைவன் பணியைக் குறிப்பிட்ட திருவள்ளுவர் குடும்பத் தலைவியின் பண்பாட்டை விளக்குகிறார். குடும்பம் தொடர்ந்து சிறக்க குழந்தையை நல்குபவள் இல்லாள்; கணவனுக்குப் பெருமிதம் தருபவள் இல்லாள்; உயர்ந்தோரால் போற்றப்பெற்று உயர்நிலையில் வைக்கப்பெறுபவள் இல்லாள்; நிறை நெஞ்சும், தனக்குரிய பெருமை, தன் தலைவனுக்கு உரிய பெருமை, தன் குடும்பப் பெருமை தாழாது காப்பதில் விழிப்புணர்வு உடையவள் இல்லாள்; இந்த விழிப்புணர்வில் உறுதியான உள்ளம் கொண்டவள் இல்லாள்; இத்தகு உறுதியுடைய இல்லாள் பெருந்தகு நிலையினாள் எனப்

பாராட்டுக்கு உரியவள். இப்பண்புகள் எல்லாம் கொண்ட இல்லாளே ஓர் இல்லத்தின் நிறை செல்வம்; அத்தகு இல்லாளைக் கொண்டதே அனைத்தும் கொண்ட இல்லம்; இத்தகு இல்லாள் இல்லாத இல் இல்லமாகாது. செல்வம், செல்வாக்கு இப்படிப் பல மாட்சிகள் இருந்தாலும் இல்லாள் மாட்சியள் அல்லள் ஆயின் எதுவும் சிறக்காது; பெருமைக்கு, பெருமிதத்திற்கு உரியது ஆகாது; வாய்த்த வாழ்வுக்கு உகந்த பண்பாடுடையவளாகத் தன்னை ஆக்கிக் கொண்டு குடும்ப வருவாய்க்கு ஏற்றவாறு குடும்பத்தை நடத்திச் செல்ல வல்லவளே இல்லாள்.

'பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பின் திண்மை உண்டாகப் பெறின்' என்றபோது கற்பெனில் இருபாலர்க்கும் அதனைப் பொதுவில் வைப்போம் என்ற பாரதியின் சோகக் குரல் கேட்கிறது. 'ஒருமை மகளிரே போலப் பெருமையும் தன்னைத் தான் கொண்டொழுகின் உண்டு' என்னும் குறள் அதற்கு ஆறுதலாக அமைந்துள்ளது.

தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.

இந்தக் குறளில் வரும் 'தெய்வம் தொழாஅள்', 'கொழுநன் தொழுதெழுவாள்', 'பெய்யெனப் பெய்யும் மழை' என வரும் மூன்று கருத்துக்களும் பெண்ணியம், பெண்ணுரிமை, ஆணுக்குப் பெண் சமம் - என்ற நேர்மையான கொள்கைகளுக்குப் பொருந்துவதும் இல்லை என்பது அறிஞர் சிலர் கருத்து.

"தனி மனித ஒழுக்கம், மனித நேயம், விரிந்த ஆன்ம நேயம் என்ற அடிப்படையில் சிந்திக்கும்போது திருக்குறள் உலக அளவில் ஒரு பொது மறையாக, பொது அறமாக, உயர்ந்த சிந்தனைக் களஞ்சியமாக உள்ளமையை அனைவரும் ஒத்துக் கொள்வர். திருவள்ளுவர் வாழ்ந்த காலம் முடியாட்சிக் காலம், ஆண் மேலின சமுதாயம் நிலவிய காலம். அந்தச் சூழலைச் சார்ந்து சில சிந்தனைகளைப் பதிவு செய்யும் போது அச்சிந்தனைகள் விமர்சனத்திற்கு உரியனவாகின்றன. இந்த வகையில் 'தெய்வம் தொழாஅள்' என்ற திருக்குறளும் விமர்சனத்திற் குள்ளாகிறது. இத்தகைய விமர்சனங்கள் சமுதாய வளர்ச்சி நோக்கிய பயணத்தில் தவிர்க்க முடியாதது மட்டுமல்ல. தேவையானதும் கூட".

- அ. பிரேமா, உலகத் திருக்குறள் மாநாடு கருத்தரங்கக் கட்டுரைக் கோவை - தொகுதி 11, ப. 852, திருக்குறள் பேரவை, திருச்சி, 1999.

அகத்திணைக் களவுத் தலைவி ஒருத்தி, அவள் மெலிவு கண்ட செவிலி வேலனுக்கு வெறியாடி அணங்கால் தோன்றியதாகத் தான் கருதும் அவள் மெலிவைப் போக்க நினைக்கிறாள். தன் நெஞ்சில் நிலைத்தத் தலைவனை விட்டு வேலனை வணங்கல் கற்பன்று என்று தலைவி நினைக்கிறாள். இப்படி ஒரு அகப்பாடல் நினைவிற்கு வருகிறது.

இந்தக் கருத்துக்கு அரண் செய்வது போலச் சிலம்பில் கனாத்திறம் உரைத்த காதையில் தன்னைப் பிரிந்த பாசாண்டச் சாத்தனை, பாசாண்ட சாத்தன் கோட்டத்திற்குச் சென்று தொழுது வரும் தேவந்தி என்னும் பார்ப்பனத்தோழி கண்ணகிக்கு உற்றதுயர் ஒன்று உண்டு என எண்ணி, அத்துயர் நீங்கும் வழியாக, காவிரி கடலொடு கலக்கும் சூரிய குண்டம் சோம குண்டம் என்னும் சங்கத் துறைகளில் நீராடிக் காமவேள் தொழுதால் இப்பிறப்பிலும் இனிவரும் பிறவியிலும் பிரியாது கணவனைக் கூடி மகிழ்வர்" என்று நெறிமுறை கூறுகிறாள்.

.................. பொற்றொடீஇ கைத்தாயும் இல்லை கணவர்க்கு; ஒரு நோன்பு பொய்த்தாய் பழம் பிறப்பில்; போய்க்கெடுக; உய்த்துக் கடலொடு காவிரி சென்றலைக்கும் முன்றில் மடலவிழ் நெய்தலம் கானல் தடம் உள. சோமகுண்டம் சூரிய குண்டம் துறைமூழ்கிக் காமவேள் கோட்டம் தொழுதால், கணவரொடு தாம்இன் புறுவர் உலகத்துத் தையலார், போகம்செய் பூமியுள் போய்பிறப்பர்; யாம் ஒரு நாள் ஆடுதும்"

- சிலப்பதிகாரம் கனாத்திறம் 54-61

என்று தேவந்தி உரைக்க, அதுகேட்ட கண்ணகி துறைமூழ்கி காமவேள் தொழுது கணவனை அடைதல் எனக்குப் பெருமை தருவதில்லை என மறைமுகமாகக் காமவேள் தொழுதலை "பீடு அன்று" என மறுக்கிறாள். இத்தகு மரபு அன்று போற்றப் பெற்று வந்துள்ளன.

'பெய்யெனப் பெய்யும் பெருமழை' என்றால் என்ன? நோன்பு நோற்று செயற்கரிய செய்தலைக் கைவரப் பெற்ற பெரியோராகிய நிறைமொழி மாந்தரது

பெருமையை அவர்களது மறைமொழி காட்டி விடுதல் போலப் பெண்களும் நோன்பு முதலிய மேற்கொள்ளாமலே, செயற்கு அரிய செய்யும் பெருமை பெற்றுத் தமது வாய்மொழியே மறை மொழியாகிப் பயன் தந்து நிற்கும் உயர்நிலையர் என்பதாம்; மழை ஒன்றே பெய்யும் என்பதன்று; இவர்கள் வாய்மொழி மறைமொழி காட்டிவிடும் என்பதே கருத்து. 'மழை பெய்தல்' ஓர் எடுத்துக் காட்டாகப் பொருளை விளக்க வந்தது. தெய்வம் தொழாஅள் என்பது துறவியர் மேற்கொள்ளும் நோன்பென்பது; ஒன்றும் செய்ய வேண்டியதில்லை என்பதைக் குறிக்கின்றது. கணவனைத் தொழுதல் என்பது அடிமையின் தொழில் ஆவதில்லை; அன்பு பாராட்டல்."

- தெ.பொ.மீ., வள்ளுவரும் மகளிரும், ப. 146

''நூல் இருவகை; தன் காலத்திற்கு நம்மை அழைத்துச் செல்வது ஒன்று; நம் காலத்திற்குத் தான் வந்து உதவுவது மற்றொன்று. நூலைக் கற்கும் முறையும் இருவகை.

காலத்தை மறந்து நூலெழுதிய காலத்திற்குக் கற்பனைச் சிறகு கொண்டு பறந்து சென்று நூற்பொருளைக் கற்பது ஒருவகை; நூலெழுதிய காலம் எதுவாயினும் அதனை விட்டு வாழும் காலத்திற்கே வந்து வழிகாட்டும் படியாக நூலைப் போற்றிக் கற்பது மற்றொரு வகை"

- டாக்டர் மு. வரதராசனார்,
திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், ப. 32.

வாழும் இக்காலத்திற்கு வந்து

"தெய்வம்தொழாஅள் கணவன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"

என்னும் குறளுக்கு, காலைப் போதில் தொடக்கத்திலேயே, கணவன் முந்நாள் இரவில் நாளை என்னென்ன குடும்பக் கடமைகள் நிறைவேற்ற வேண்டும் எனக் கேட்டுக் கொண்டானோ அவற்றை நினைந்தவளாய்க் காலைப் பணியைத் தொடங்கல் வேண்டும் (தொழுதல் இங்கு நெறிநிற்றல், வழி

செல்லல், கருத்துப்படி நடத்தல் என்னும் பொருளாகும்) இத்தகு தான் செய்து நிறைவேற்ற வேண்டிய குடும்பக் கடமைகளைத் தானே திட்டமிட்டுத் தன்னம்பிக்கையோடு நிறைவேற்ற வேண்டுமே அன்றி வேறு ஒரு பொருளை, வேறு ஒருவரை, வேறு ஒரு தெய்வத்தை நம்பி நாட்கடனை, கடமையை நிறை வேற்றுவதைத் தள்ளிப்போடக் கூடாது என்பதே 'தெய்வம் தொழாஅள்' என்பதன் பொருளாகக் கொள்ளல் வேண்டும்; அத்தகு பெண் நல்லாள், பயிர் எதிர் நோக்கும் காலத்தில் பெய்து பயன் நல்கும் பருவ மழைபோலக் குடும்பம் எதிர்பார்க்கும் பயனை உரிய காலத்தில் அளிக்க வல்லவள் ஆவாள்.

தான், தனக்கே என்றிருந்த ஒரு மனம், நாம், நமக்கு, நமக்கே எனத் தலைவன் தலைவியாய்க் குடும்ப வாழ்வு துவங்கி இவர், இவர்க்கு, இவர்க்கே என மனம் பின்னும் விரிவடைதற்கு, தூய்மை பெறுவதற்கு உரிய வாய்ப்பை நல்கும் மக்கள் பேற்றை அடுத்து வள்ளுவர் எண்ணுகிறார்.

அம்மக்களும், அறிவறிந்தவராய், பழிபிறங்காப் பண்புடையவராய், தமக்கு உரிய குணநலன் உடையவராய், இன்பம் தருபவராய், இனிய மழலையினராய் அமைதல் வேண்டும், வளர்த்தல் வேண்டும் என்றும் இந்த வளர்ப்பில் குழந்தை அறிவு வளர்ச்சிக்குத் தந்தையும், பண்பு வளர்ச்சிக்குத் தாயும் சிறப்புப் பொறுப்பாவர் என்றும் அந்தக் குழந்தை, தன் தந்தை தன்னை வளர்க்க எத்தனை எத்தனை முயற்சிகள் செய்துள்ளான் என்று இவன் விழுமிய ஒழுக்கங் கண்டார் உரைக்குமாறும், தான் பிறந்த குடிப் பெருமையும் பீடும் தன்னால் மேலும் மேலும் சிறக்குமாறும் வாழவல்ல மக்கட்பேற்றையே திருவள்ளுவர் இங்குப் பெரிதும் கூறுகிறார். 'நஞ்சுண்டான் சாமி' என்பது போல, 'தந்தை மகற்காற்றும் நன்றி' 'தன் மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய்' "மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி' ஆகிய தொடர்களுக்கு, இருபாலார்க்கும் இணைத்துப் பொதுவில் வைத்துப் பொருள் கொள்ளல் வேண்டும். மற்ற ஏழு குறள்களிலும் மக்கள் எனப் பொதுச் சொல்லே இடம் பெற்றுள்ளது. தம் பொருள் என்ப தம்மக்கள், அமிழ்தினும் ஆற்ற இனிதே தம் மக்கள் சிறுகை அளாவிய கூழ், மெய் தீண்டல் உடற்கின்பம் சொல் கேட்டல் செவிக்கின்பம் முதலிய தொடர்கள் இருபாலார்க்கும் பொதுவே.

தான், தாம், அவர் என மெல்லமெல்ல விரிந்த மனம், விளைந்த உயிர் அன்பின் திறத்தை, நலத்தை, பலத்தை,

உணருமாறு செய்வதற்கு அடுத்து அன்புடைமையை உணர்த்தத் தொடங்குகிறார். அடைக்குந்தாழற்றது அன்பு, அனைத்தும் பிறர்க்களிப்பது அன்பு, அன்பே என்பையும் உயிரையும் இணைத்து இயைத்து மனிதனாய், மன்னுலகில் உலவவிட்டது. அன்பே ஒருவன் உள்ளத்தில் ஆர்வம், நட்பு உணர்வுகளை உருவாக்கித் தனியனாய் இருந்து, குடும்பத்தவனாய் வளர்ந்த ஒருவனைச் சமுதாயத்தவனாய் விரிவடையச் செய்வது. வாழ்வதன் நோக்கமாகிய இன்பச் சிறப்பை வழங்குவது அன்பே. அன்பு அன்பர்களை அறவோர்களை அன்புச் செயல்களை, அறச் செயல்களைச் செய்வதற்குத் துணையாகும். அது மட்டும் அன்று; அறம் அல்லாத சமுதாயக் கேடுகளை, சமுதாய மக்களை நல்வழிப்படுத்த உதவுவதும் அந்த அன்பே. அன்பு செய்தலே வாழ்வினாம் பயன்; அவ்வாறு அன்பு செய்யாது இருப்பினும், துன்பு செய்யினும் எப்படி இயல்பாக எழுந்து காயும் வெயில் வழி அகப்பட்டு என்பிலாத புழுக்கள் சூட்டால் துன்புற்றுத் துவளுமோ, துடிக்குமோ அப்படியே அறம் அவர்களை வாட்டும்; வருத்தும். அன்பில்லா வாழ்வு துளிர்க்காது, மலராது, கனியாது; வெப்பம் ஏறிக் கிடக்கும் பாறையில் நீரற்று வற்றிய மரம் எப்படித் துளிர்க்காதோ, மலராதோ, கனியாதோ அப்படியே அன்பு பாறைகளில் உறங்குகிறது; மரம் செடி கொடிகளில் விழிக்கிறது; பறவை விலங்குகளில் எழுகிறது; மனிதரிடத்தே நடக்கிறது. இப்படி இயக்க விதிக்கு எல்லாம் அடிப்படை அன்பே. அந்த அன்பு அகத்தில் இல்லாதபோது புறத்தே உள்ள கண்ணுக்குக் கண்ணோட்டம் இருக்குமா? வாய் இன்சொல் பேசுமோ; கால் செல்லக் கை உதவுமோ - இப்புறத்துறுப்பு எல்லாம் அகத்துறுப் பாகிய அன்பு இல்லையாயின் பயனின்றாம்; பழியாம்; பாவமாம். எனவே அன்புடையரே உயிர் உடையர்; அஃது இல்லாதவர் உயிர் அற்றார்; நடைப்பிணம் ஆவர்.

இங்கு அன்பின் நிலையான பண்புகளை எல்லாம் பொது நோக்கு உத்தியிலேயே புகன்றுள்ளார் எனலாம்.

அன்பெனும் பண்பு செயலாக முகிழ்க்கும் போது இல்லறத்தில் இயல்பாக விருந்து இடம்பெறுகிறது. துறந்தார், துவ்வாதார், துறவிகளுக்கு இல்வாழ்வான் துணை. அன்றியும் உடன் போக்கில் ஊர் துறந்து உறவு துறந்து வந்த தலைவன் தலைவியர்க்கும் இல்வாழ்வான் துணை. இவரெல்லாம் இல் வாழ்வானை நாடி வருவர். அவர்க்கு விருந்தளிப்பதற்கே எளிதான துறவு வாழ்வை மேற்கொள்ளாது, ஈட்டியும், காத்தும் தொழில்

பல புரிந்து கடமை பல ஆற்றும் இல்லறத்தில் இருந்து வாழ்பவன் கடமையாகும். அந்தக் கடமையே விருந்தெனத் திருவள்ளுவரால் எடுத்தியம்பப்படுகிறது. இப்போதெல்லாம் இயல்புடைய மூவர்க்குத் தொண்டில்லங்கள் பல உள. சிற்றுண்டிச்சாலை, தங்குமிடம் பல உள. எனவே விருந்து இந்தக் காலத்திற்கு ஏற்ற ஒன்றா? அன்றியும் 'விருந்து' என்று இன்று நிகழ்த்தப் பெறுவது செல்வர்க்கும் செல்வாக்கு உள்ளவர்க்குமே அல்லவா? துறந்தார்க்கும் துவ்வாதார்க்கும் இறந்தார்க்கும் அல்லவே என எண்ணப் பெறுகிறது. எனவே இங்கு விருந்து என்பதனைப் பசியாற்றல், சீவகாருண்யம் எனக் கொள்ளல் வேண்டும். உண்ணவும் உண்டியை ஆக்கவும் வல்ல இல்லறத்தான் பசித்தவரோடு பகிர்ந்துண்டு வாழும் பண்பாட்டின் தொடக்க உணர்வாக விருந்தைக் கருதலாம். உணர்வு நிலையில் மனவிரிவு நிலையில் அறத்துப்பாலை ஆக்கிக் கொண்டு செல்லும் வள்ளுவ அறக்கோயிலில் இதுவும் ஒரு வாயில்.

நினைவால், சொல்லால், செயலால், எல்லார்க்கும் எங்கும் எப்போதும் எவ்வுயிர்க்கும் நன்மை பயப்பதே அறம்; துன்பம் செய்யாததே அறம். அறவழி மனத்தூய்மைக்கு, மனவிரிவுக்கு விருந்தோம்பல் ஒரு செயல் ஆயிற்று. அடுத்து இனியவை கூறல் மொழிதல் அறம் ஆகும்.

இறை அன்பாய் எல்லா உயிரிடத்தும் இயங்கும் இயற்கையை உணர்ந்தவர்கள் மொழிகின்ற சொற்களே இன்சொல்லாம். அவர் சொல்லில் இனிமை இருக்கும். 'வாழ்க' என்பது போலப் பொருளில் அன்பிருக்கும். 'வாழ்க வளமுடன்' என்பது போல விளைவில் நலம் பயக்கும். 'வாழ்க வளமுடன் பல்லாண்டு' என்பது போல 'ஈதல்' நன்று; அகம் அமைந்து பெறுவோன் முகம் மலர ஈதல் மிக நன்று. ஆனால் அவற்றினும் மிகமிக நன்று அன்பு கனிய மலர்ந்து நோக்கி, அகம் பொருந்த இன்சொல் மொழிவதே அறம். அறிந்தோரிடத்து மட்டுமன்றி அறியாதோரிடத்தும், நண்பர் மாட்டுமன்றிப் பகைவர் மாட்டும் அவர்கள் நெஞ்சு குளிரும் இனிய மொழி கூறுவோர்க்கு வாழ்வில் வறுமைத் துயர் வருவதில்லை. ஒருவர்க்கு உண்மையான பொலிவு தருவது பணிவுடைமையும் இன்சொல்லுமே ஆகும். பிற புறத்தில் அணியும் அணிகலன்கள் தரும் அழகு நிலைத்தன அல்ல. கேட்போர்க்கு எது நலம் பயக்கும் என எண்ணி ஆராய்ந்து நல்லனவற்றையே இனிமையாகச் சொல்பவரிடத்தே முன்புள்ள பாவம் பழிகள் தேய புகழ், புண்ணியம் பெருகும். பிறர்க்கு நலம் பயக்கும். இனிய சொல் நட்பை வளர்க்கும்; நலத்தைத் தரும்.

பிறர்க்குத் துன்பம் தராத இனிய சொல் மறுமை இம்மைப் பேற்றின்பங்களை வழங்கவல்லது. இன்சொலால் கேட்போன், சொல்வோன், பார்ப்போன், பயில்வோன் இப்படி அனைவர்க்கும் இன்பம் தரும்போது துன்பந்தரும் கொடிய சொற்களைக் கூறுதல் மனிதத் தன்மை ஆகாது. கனி இனிது; மென்மையானது; அழகிய வண்ணம் உடையது; மணம் மிக்கது; மென்மையானது; வித்தின்வழி மேலும் வாழ்வைத் தோற்றுவித்து வளர்ப்பது. பறிப்பதற்கு உகந்தது; எளியது; தன் வண்ணத்தால் மணத்தால் அருகில் வருவோர்க்குத் தன்னை வெளிப்படுத்திக் கொள்வது. இவ்வாறு இருக்க பசிய இலைகளுக்கு இடையே பச்சை வண்ணத்தில் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்திருக்கும் காயை அரிதின் முயன்று காம்பினின்று உடைத்து, பிய்த்துப் பறிப்பது போன்றது இனிய, நல்ல சொல் பல மொழிவதற்கு இயல்பாக நிறைய இருக்க அருகிய எங்கோ நினைவுக்கு வராத கொடிய சொல்லைத் தேடிப் பிடித்துக் கூறுவது ஆகும்.

'ஒரு பிடி சோற்றில் உலகமே உள்ளது' என்பார் வேதாத்திரி மகரிஷி. உலகம், சமுதாயம் வழி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வரும் பயன் அடைகிறோம்; உதவி பெறுகிறோம். இப்படி ஒருவர்க்கு ஒருவர் உதவி வாழ்வதால் மனம் விரிவும் தெளிவும் அடைகிறது. இறை உணர்வு அறவாழ்வே மனிதப் பிறப்பின் பயனை நல்குவது. அறவாழ்வு பிறர் உதவியை மறவாது நினைப்பது; ஒன்றுக்குப் பத்தாய் மீண்டு தருவது. ஒரு மாங்கொட்டை விதைத்தால் அது ஒரு மாங்கனியா தருகிறது? நூறுநூறாக அல்லவா தருகிறது. ஒன்றுக்குப் பத்து, நூறு திரும்பத் தருவது இயற்கையின் இயல்பு. இயற்கையின் இயல்பு நெறி உணர்ந்து வாழும் மனிதனுக்கு அந்த இயல்பு வேண்டும் அல்லவா. பிறர் ஓர் உதவியும் செய்யாத போதும் அவர்க்கு உதவுவது, ஒருவர் துன்பத்தால் வருந்தும் நேரத்தில் தக்கவாறு உதவுவது, எந்தவித எதிர்பார்ப்பும் இன்றி உதவுவது முறையே வானைவிட உயர்ந்தது, நிலத்தைவிட பெரிது, கடலைவிட அகன்றது. தினை அளவு சிறுஉதவி செய்தாலும் உதவிய பொருள், உதவிய காலம், உதவிய நோக்கு, உதவியால் விளைந்த பயன் இவற்றை எண்ணிப் பார்ப்பார்க்கு அது பனையளவு பெரிதாய்ப் புலப்படும். அதனால் பொருளின் அளவைக் கொண்டு உதவியை எடைபோடக் கூடாது. பெற்ற பயனைக் கொண்டு மதிப்பிட வேண்டும்; பெற்றோர் தகுதியைக் கண்டு மதிப்பிட வேண்டும். துன்பத்திற்குத் துணையானார் உதவியை மறத்தல் கூடாது. துன்பம் துடைத்தவர் செய்த உதவியை ஒருவர்

பரம்பரை பரம்பரையாக நினைப்பர்; நினைத்தல் வேண்டும். வாழ்வில் பலரிடம் பழகுகிறோம். சிலர் நலம் செய்வர்; சிலர் செய்யார்; சிலர் கேடு செய்வர். நல்லதை நினைத்தலும் கேட்டினை மறத்தலும் நன்று. ஒருவரே நன்மையும் தீமையும் செய்திருப்பர்; தீமை பலவாக இருந்திருக்கலாம்; உயிர்க்குத் துன்பம் விளையத்தக்க செயலை ஒருவர் செய்தாலும் அவர் எப்போதோ ஏதோ ஒரு நன்மை செய்ததை நினைத்து அத்துன்பத்தை மறந்து அவரிடம் அன்பு செயல் வேண்டும். இது மனத்தூய்மைக்கு வழியாகும். உலகம் ஒன்றுக்கு ஒன்று உதவுவதால் இடையறாது வாழ்கிறது. இப்படிப் பலர் உதவியால் வாழும் ஒருவன் அந்த உதவி செய்யும் குடும்பத்தை, சமுதாயத்தை மறப்பின் அவன் வாழ்வு சுருங்கிப் போகும்.

அறம் பொது. அதற்கு வேண்டியோர் வேண்டாதோர் இலர். எனவே நம்மவர் பிறர் என்று விருப்பு வெறுப்புக் காட்டாது நீதியோடு ஒழுகல் வேண்டும். இதுவே நடுவுநிலைமை ஆகும். நடுவுநிலையில் நின்ற ஒருவன் சேர்த்த பொருள் அழியாது; வழிவழியாக வளர்ந்து பெருகும். நடுநிலைமை தவறிப் பெறும் செல்வம் பெரிதாயினும் பெறாது மறுத்து ஒதுக்குதல் நன்மை தரும். ஒருவர் மறைந்த பின் நிற்கும் புகழால் பழியால் அவர்தம் நடுநிலைமைத் தன்மை அறியப் பெறும். வாழ்வில் வளம் வருதலும் உண்டு; வறுமை வருதலும் உண்டு. எந்நிலையிலும் நெஞ்சில் நடுநிலை தவறாமல் வாழ்தல் சான்றோர்க்குச் சிறப்புத் தருவதாகும். எப்போதேனும் நெஞ்சம் நடுநிலை தவறி அறம் அல்லது செய்யத் துணியுமானால் கேடுவரப் போகிறது என்பதாக உணர்ந்து திருந்தி நடுநிலையில் நிற்பாயாக. நடுநிலை காக்க அறநெறி நின்றவருடைய தாழ்வை உலகத்துச் சான்றோர் தாழ்வாகக் கருதார்; பெருமையாய்ப் பாராட்டுவர்.

சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க்கு அணி (118)

மனம் நேர்மையாயின்; சொல் நேர்மையாய் அமையும்.

நடுநிலை சிறப்பாக நீதித்துறையினர்க்கு வேண்டும். பொதுவாக வணிகர்க்கு வேண்டும். சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்து ஒருபால் கோடாமையை நீதி நெறியினர்க்கு உணர்த்திய வள்ளுவர் கொள்வதும் மிகை கொள்ளாது கொடுப்பதும் குறைபடாது நடுநிலையோடு வாணிகம் செய்யின் அது சமுதாயத்தில் வாணிகம் சிறக்க உதவும் என்கிறார்.

பேராசிரியர் மு.வ. 'மனம் உன் கையில் உள்ளவரை உன்னால் நலமாக வாழ இயலும். ஆனால் மனத்தின் கையில் நீ உள்ளவரை உன்னால் நல்வாழ்வு வாழ இயலாது' என்பார். எனவே மனம், மொழி, மெய் இவற்றின் செயல்களை விழிப்பு நிலையில் நாம் வைத்துக் கொள்ள வேண்டும். ஐம்புலன்களும் உணர்ச்சி வழி வயப்படாமல் அறிவின் கீழ் அடங்கவேண்டும்.

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆர்இருள் உய்த்து விடும். *(121)*

"பொருள், புகழ், புலன் இன்பம், அதிகாரம் இந்நான்கிலும் பற்றுக் கொண்டு மனம் இயங்கும் போது உணர்ச்சி வயப்பட்டு ஆன்மாவானது தன்முனைப்புப் பெறும். தன் முனைப்பின் வெளிப்பாடுதான் பேராசை, சினம், கடும்பற்று, முறையற்ற பால் கவர்ச்சி, உயர்வுதாழ்வு மனப்பான்மை, வஞ்சம் என்ற ஆறு குணங்களும். இந்தத் தன்முனைப்பு அடங்கினால்தான் இறையுணர்வு உண்டாகும். முன்கூறிய மனமாசு ஆறும் அகன்று நற்குணம் அமையும். இந்த உயர் அறிவுநிலையைத் தான் 'அமர்ந்த அருள்' என்று கூறுகிறார் வள்ளுவர். அவ்வாறு அடங்காத தன்முனைப்பு நிலை அறிவிற்கு மயக்க நிலையை, இருள் நிலையை ஏற்படுத்தும், வாழ்வு துன்பம் சூழ்ந்ததாகவே இருக்கும்"

- யோகிராஜ் வேதாத்திரி மகரிஷி,
*திருக்குறள் உட்பொருள்விளக்கம், பக். 72-73.*

எல்லாச் செயலுக்கும் விளைவு உண்டு; காலம் உண்டு. வாழை பத்து மாதத்தில் பயன்தரும் என்றால் மா நூறு மாதத்தில் பயன் தரும். விளைவு, செய்த வினைக்கு ஏற்ப குறுகிய அல்லது நீண்ட காலத்திற்குப்பின் விளைவு தரும். மனமாசால், அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொற்களால், அடக்கமின்றி ஒருவர் எண்ணும், சொல்லும், செய்யும் பழிச்செயல் செய்தவன் இடத்தில் செயப்பட்டவனிடத்தில் செய்த செய்யப்பட்ட உலகத்தில் பதிவாகித் தவறாது பின்விளைவு தரும். இதனை உணர்ந்து மன அடக்கத்தை மானிடர் தம் வாழ்வில் கொள்ள வேண்டும் எனச் சடங்கு, சாத்திரம் பற்றி எதுவும் குறிப்பிடாமல் பொது நோக்கில் பொதுமை உத்தியை மேற்கொண்டு திருவள்ளுவர் உரைக்கிறார்.

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து 126

யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகப்பர் சொல்லிழுக்குப் பட்டு 127

ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்றாகா தாகி விடும். 128

தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்டவடு 129

'வடு' வினைப்பதிவாகி விளைவுதரும் வரை நிலைத்து நிற்கும்.

கதம்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து 130

அறநூல் கற்று, கற்றவழி அகத்தவம் பயின்று, அதன்வழி நின்று (காம, குரோத, லோம, மோக, மத, மார்ச்சர்யம்) ஆறு குணக்கேடுகளை ஆறு நலக்குணங்களாக மாற்றிக் கொண்டு வாழ்வான் செயல் யாவும் அறச்செயல்களே ஆகும்.

என்றும் எவர்க்கும் இன்னா பயக்காத எண்ணம், சொல், செயல் இவற்றின் வழி நிற்றலே ஒழுக்கம். என்றும் எவர்க்கும் இன்பு செய்யும் எண்ணம், சொல், செயல் இவற்றின் வழி நிற்றலே ஒழுக்கம். இந்த ஒழுக்க வாழ்வே ஆறறிவு உடைய மானுடராய்ப் பிறந்ததன் உயிர் நோக்கம். எனவே, இந்த நோக்கம் உயிரினும் பெரிதல்லவா.

பிறப்பால் பெருமை வருவதில்லை. வேதம் ஓதுவதால் வேதியர் என்ற கல்வியால் பெறும் பெருமை ஒருவருக்கு உரியதில்லை. மனமாசற்று உயிர்க்கெல்லாம் உதவி வாழும் ஒழுக்கநெறியே உயர்வுக்குக் காரணம்.

மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பார்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும். 134

பேராசை, சினம், கடும்பற்று, தவறானபால்வேட்கை, உயர்வு தாழ்வு மனப்பான்மை, வஞ்சம் என்னும் தீய அறுகுணமே மன மாசுகள் ஆகும்.

ஆடையில் அவ்வப்போது அழுக்குகள் சில படிகின்றன. சில அழுக்குகள் உவர் மண்ணால் நீங்கப்பெறும்; சில அழுக்குகளை எலுமிச்சை சாறு அகற்றும். எண்ணெய்க் கசண்டுகளை அகற்ற

அரப்புத்தூள் பயன்படும். குருதிக்கறை போக்க சில அமிலம் பயன்படும். இப்படி அழுக்குகள் பல. அழுக்கின் இயல்பு எத்தகையது, அதனால் நேரும் கேடுகள் யாவை அவற்றை எப்படிப் போக்கித் தூய்மையாக்கலாம் என எண்ணிச் செயல்பட வேண்டும்.

ஆடையில் சேரும் இடத்திற்கு ஏற்பப் படியும் அழுக்கு போல் மனம் உணர்ச்சி வயப்பட்டு அறிவு மயங்குதற்கு ஏற்ப அதில் மாசுகள் படிகின்றன. அந்த மாசுகளானப் பிறனில் விழைதல், அழுக்காறுடைமை, புறங்கூறல், தீவினைசெய்தல் முதலியன தனி வாழ்வு சமுதாய வாழ்வு இரண்டையும் கெடுக்க வல்லன. அவற்றை 15, 17, 18, 19, 20, 21 ஆகிய ஆறு அதிகாரங்களில் எடுத்துரைக்கிறார்.

முறையற்ற பால் கவர்ச்சி (மோகம்) அறுகுணக்கேட்டில் பெரிதும் மானிட உயிர் வாழ்வுக்குக் கேடுபயக்கும். ஆதலால் குடும்ப, சமுதாய வாழ்வை எரிக்கும். ஆதலால் அதனை முன் வைத்து விளக்குகிறார்.

பிற ஐவகை நன்னெறிகளில் நின்று ஒழுகானாயினும் சமுதாயத்திற்கு அவ்வளவு கேடில்லை. ஆனால் பிறன்மனை நயத்தல் என்னும் இந்தப் பால் கவர்ச்சியால் விளையும் கேடோ மிகப்பெரிது.

அறன்வரையான் அல்ல செய்யினும் பிறன்வரையான்
பெண்மை நயவாமை நன்று.

பகை, பாவம், அச்சம், பழி என்னும் நான்கும் பிறன்மனை விழைவான் அகப்புற வாழ்வுக்கு அல்லல் செய்யும்.

இன்னொருவனோடு ஒப்பந்தம் செய்துகொண்டு மற்றொருவனோடு உடல்உறவு கொள்ளும் தவறான உறவே இங்குக் கடியப்படுகிறது. இப்போது நீதித்துறை வழி மணவிலக்கு பெற்றபின் கூடும் உறவு இங்குக் கூறப்பெறவில்லை.

அழுக்காறு, அறம், பொருள், இன்பம் அனைத்தையும் ஒருவன் துய்க்க இயலாமல் செய்துவிடும். யாரும் எந்தக்கேடும் ஒருவர்க்குச் செய்யாவிட்டாலும் ஒருவனுக்கு அவனிடம் குடி கொண்டுள்ள அழுக்காறே எல்லாக் கேட்டையும் செய்துவிடும். எனவே அழுக்காறு இன்மையை ஒழுக்காறாகக் கொள்ளல் வேண்டும்.

அறனாக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம்
பேணாது அழுக்கறுப் பான் 163

அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது 165

அழுக்கா றெனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும் 168

**வெஃகாமை**

அன்புடையார் பிறர்புகழ் கேட்டு மகிழ்வர். பிறர் பொருள் வளத்தோடு வாழ்வது கண்டு போற்றுவர். அப்படி அல்லாதோர் பொறாமைப்படுவர். அப்படிப் பொறாமைப் படுதலையே குற்றம் என உலகக் கண்ணோட்டத்தில் உரைத்த வள்ளுவர் பிறர்பொருளுக்கு ஆசைப்படுவதை எப்படிக் கருதுவார்?

நடுவுநிலை உள்ள நெஞ்சம் பிறர் பொருளை விரும்பாது; வறுமையுற்றாலும் விரும்பாது. பெரும்பயன் வரும் என்றாலும் விரும்பாது. அப்படிப் பிறர் பொருளைக் கவர்வது விலங்கு நிலை. நுண்மாண் நுழைபுலம் உடைய மனிதன் பெற்ற ஆறறிவு அதற்கு இடம் தராது. பிறர் பொருள் விழைவோன் தன் பொருளையும் இழப்பான், அருள் உணர்வு அவனை விட்டுப் போகும். பிறர் பொருளை விரும்புவது அறன் அன்று எனத் தெளிவுடையோர் இடத்துச் செல்வம் வந்து சேரும்; விரும்பாமை என்னும் பெருமிதம் அவர்பால் அமையும்.

அறனறிந்து வெஃகா அறிவுடையார் சேரும்
திறனறிந்து ஆங்கே திரு. 179

வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
மாண்டற்(கு) அரிதாம் பயன். 177

**புறம்கூறாமை**

குறை மனம் பார்க்கின்ற இடம் எல்லாம், பழகுகின்ற மனிதரிடம் எல்லாம் குறை காணும்; குற்றம் காணும். நிறை மணமே நலம் காணும். இப்படிப் பிறர் குற்றம் காணும் மனத்தை நல்வழிப் படுத்துவது எப்படி? புறத்தே பிறர் குற்றம் காணும் மனத்தை உள்முகமாகத் திருப்பித் தான் செய்த குற்றத்தைச் சிறிது நேரம் எண்ணச் செய்தலே மனத்தை நல்வழிப்படுத்தும் நெறி.

ஏதிலார் குற்றம்போல் தன்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு 190

'மன்னும் உயிர்க்கு' என்றது தான் சொல்ல வந்த செய்தி எக்காலத்தும் எல்லார்க்கும் பொருந்துவதே என்பதைப் புலப்படுத்த.

'ஆய்ந்தாய்ந்து கொள்ளல் வேண்டும்' நட்பு என்பர் வள்ளுவர்.அப்படி ஆய்வதற்குப் பலவழி உள. அதில் ஒன்று புறங்கூறித் திரிபவன் அறம் அற்றவன் எனத்தெளிந்து அவன்பால் நெருங்காது அவனை நெருங்கவிடாது வாழ்தல்.

அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும் 185

பயனில சொல்லாமை

மனிதர்க்குக் கிடைத்த வரமே பேசுந்திறமை. பயனுடைய, நயனுடைய சொற்களால் நற்சுற்றம் வாய்க்கும். அல்லார்பால் தீச்சுற்றம் சேரும். புறங்கூறுவாரால் சமுதாய அமைப்பில் பிளவு ஏற்படும். பயனில பாராட்டிப் பேசுவாரால் சமுதாய அமைப்பின் வளர்ச்சி கெடும்.

பலர் வெறுக்கும் அளவுக்குப் பொருளற்றுப் பேசுதல், பொருளற்ற சொற்களையே பேசிப்பேசித் தன் வாழ்நாளையும் பிறர்வாழ்நாளையும் குறைத்தல், பண்பற்ற சொற்களைப் பேசுதல், சொன்னதையே சொல்லும் கிளிப்பிள்ளை போலப் பயனற்ற சொற்களையே மீண்டும் மீண்டும் ஆர்வத்தோடு உரைப்பவன் மனிதப்பிறப்பின் பயன் உணராத மனிதன் ஆவான். அவனால் அவனும் உயரமாட்டான், அவன் வாழும் சமுதாயமும் உயராது.

பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கட் பதடி எனல் 196

தீவினை அச்சம்

"முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்"

"வினை விதைத்தவன் வினை அறுப்பான்
தினை விதைத்தவன் தினை அறுப்பான்"

என்னும் பழமொழிகளை அனைவரும் அறிவர். செயலுக்குத் தக்க விளைவு தருதலால்தான் அறத்தின் ஆட்சி அமைந்துள்ளது.

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு.

ஒருவர் நிழல் தவறாது அவனைத் தொடர்வது போல ஒருவர் செய்த வினையும் அவரைத் தவறாது பற்றும்.

தீ குறிப்பிட்ட காலம்வரை, குறிப்பிட்ட இடத்தைத்தான் எரிக்கும். ஆனால் தீயவையால் விளையும் கேட்டிற்கு எல்லை இல்லை. எனவே தீயவை தீயினும் அஞ்சப்படும்.

தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும் 202

பொறையுடைமை

பொறாமை உடையோர், பிறர் உரிமைப் பொருளைக் கவர்வோர், பிறரைப் பழித்துப் புறங்கூறுவோர், பயனற்ற சொற்களைப் பாராட்டிப் பேசுவோர், பிறர் உயிர்க்குத் துன்புறும் செயல்களைச் செய்யத் துணிவோர் இப்படி மன மாசுடையோரையும் கொண்டதுதான் நம் சமுதாயம். நம் வீடும் கூடு. இவர்களோடுதான் வாழ வேண்டி உள்ளது. அங்கிங்கு எனாதபடி எங்கும் எவரிடத்தும் அருளொடு நிறைந்திருக்கும் தெளிவுடையோர் பொறுமையோடு அவர்களிடம் பழகி அவர் மனமாசு அகல உதவியருளல் வேண்டும்.

தன்னைத் தோண்டித் தோண்டிக் கொண்டிருக்கும் தொழிலாளர்களையும் இந்த நிலம் தாங்கிக் கொண்டு தானே உள்ளது? புறம் தள்ளிவிட வில்லையே! எனவே அறியாமல் துன்பம் செய்தாலும் அறிந்தே துன்பம் செய்தாலும் இறைவன் உணர்வில் அவற்றைப் பொறுத்தல் நன்று; அத்துன்பங்களையும் துன்பம் செய்தாரையும் மறந்துவிடல் அதனினும் நன்று.

பழிக்குப்பழி, இரத்தத்திற்கு இரத்தம் என்று பொறுமையின்றிக் கேட்டிற்குக் கேடே செய்யும் விலங்கு மனத்தாரை இந்த உலகம் நினைவிற் கொள்வதில்லை. பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைந்த சாக்ரடீசு போன்றோரையே என்றும் நினைவில் வைத்துப் போற்றுகின்றது. எனவே பதிலுக்குப் பதில் தண்டித்துவிட்டவர்க்குத் தண்டித்த அப்போது தான் இன்பம். ஆனால், மன்னித்து அருளியோர்க்கோ அவர் மறையும்வரை, மன்னிப்புப் பெற்றோர் மறையும்வரை, அந்த நிகழ்ச்சி மன்பதை நினைவிலிருந்து மறையும்வரை புகழாக நின்று நிலைக்கும்.

ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ் 156

அறமல்லார் கூறும் பழிச்சொல்லை, அன்பிலார் சொல்லும் பாபச்சொல்லைப் பொறுத்துக் கொள்வோர் மனம், துறந்தார் மனத்தைவிட உண்ணாது நோன்பு மேற்கொள்வோர் மனத்தைவிட தூயதாகும்.

உண்ணாது நோற்பர் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின் 160

**ஒப்புரவும் ஈகையும்**

"ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்"

என்பர் திருவள்ளுவர். பிறர் துயர் அறிந்து உதவுதலே அறிவினாம் பயன் என்றும் கூறுவார். ஆறறிவு பெற்ற மனிதன், தெளிவு பெற்ற மனிதன் பிறர்துயர் அறிந்து, துன்பம் உணர்ந்து அவர் கூறாமலே, கேளாமலே தானே உதவியருளல் ஒப்புரவு ஆகும்.

இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய காந்தியடிகள் கண்ட தருமகர்த்தா பொருளாதாரச் சீர்திருத்த கோட்பாடு இதன்கண் அடங்கியுள்ளது. ஊருணி, பயன்மரம், மருந்து மரம் என்னும் உவமைப் பொது உத்திகளால் வள்ளுவர் கூறிய கருத்துக்கள் இந்தக் காலத்துக்கும் மிகப் பொருத்தமாக இருத்தலைக் காணலாம்.

பருவ நிலைக்கு ஏற்ப நீர்த்தேக்கம் கூடுவதும் குறைவதும் உண்டு. ஆனால் கடனறி காட்சியனாகிய அறிவன் இரு நிலைகளிலும் தவறாது ஊருணிபோல உதவுவர். இதுவே ஒப்புரவு.

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகுஅவாம்
பேரறி வாளன் திரு.

பிற உயிர்த்துன்பத்திற்கு நெஞ்சு நெகிழ்ந்து உதவி செய்யும் நயனுடையான் பழுமரம் போல் பருவகாலத்தில் உதவுவதோடு பருவமில் காலத்தும் அப்பழத்தைப் பதப்படுத்தி வைத்திருந்து உதவுவான்.

பயன்மரம் உள்ளூர் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கட் படின். 216

வேர், தண்டு, இலை, பூ, காய், கனி, விதை, பட்டை அனைத்தாலும் பிறர்நோய் தீர்ப்பதில் தன்னையே அழித்துக் கொள்ளும் தம்மை இழக்கும் பெருந்தாகையர் அருளாளரே ஒப்புரவாளர். அவர் மருந்தாகித் தப்பா மரத்தனையர்.

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்

'ஈ' என இரப்பவர்க்குத் தன் கை வருந்த உழைத்துப் பெற்ற பொருளைத் தந்து இரப்பவர் துன்பம் தவிர்த்தலே ஈ + கை = ஈகை. இரத்தலும் ஈதலும் அற்ற சமுதாயமே ஒரு நல்ல சமுதாயம். அப்படிப்பட்டவர் இல்லாத நாடே ஒரு நல்ல நாடு. அப்படியிருக்க வள்ளுவர் ஈகைப் பற்றிப் பாடுவது எப்படிப் பொருந்தும். பொதுநோக்கு உத்தி ஆகுமா இது - என்ற ஐயம் சிந்திப்பார்க்கு எழுதல் கூடும்.

பொருள் இல்லை என்று ஏங்கும் சமுதாயம் ஒன்று - அது பொது உடைமை, தருமகருத்தா முறை இப்படி ஏதேனும் ஒன்றினால் இல்லாமற் செய்துவிடலாம். ஆனால் அருள் இல்லையே, அன்பு கிடைக்கவில்லையே, அறிவுபெற வாய்ப்பில்லையே என ஏங்குவோர்க்கு எதிர்பார்ப்பு ஏதுமின்றி அன்பை, அருளை, அறிவை ஈதலும் ஈகைதானே. இந்த அன்பு இரப்பு, அருள் இரப்பு, அறிவு இரப்பு மானுடம் உள்ளவரை இருந்துதான் தீரும். அன்பால் அமையும் குடும்ப வாழ்வு, அருளால் அமையும் சமுதாய வாழ்வு, அறிவால் அமையும் இறை உணர் வாழ்வு என்றும் இருக்கும் அல்லவா. இவைதானே சமுதாயத்தைப் பின்னிப் பிணைத்து நின்று நிகழுமாறு இயக்கிக் கொண்டிருக்கின்றன. இவை இல்லையெனில் மானுட வாழ்வு பசையற்றுப் போய்விடும் அல்லவா? மரப்பாவை வந்து செல்வது போல உணர்வற்ற இயக்கமாக அமைந்துவிடும் அல்லவா? எனவேதான் 'ஈகை' குறளில் இடம்பெறுகிறது.

எது ஈகை? இப்போது ஈகை என்ற பெயரில் கையூட்டு (இலஞ்சம்) நடமாடுகிறது. ஈகை என்ற பெயரில் வாக்குரிமை பெற்றுப் பதவிபெறும் அரசியல் நடைபெறுகிறது. ஈகை விளம்பரக் கருவியாக ஆக்கப்பெறுகிறது. இதற்கெல்லாம் இடம் கொடாதது திருவள்ளுவர் கூறும் 'ஈகை'.

இல்லார்க்கு, பசித்தவர்க்கு ஈதலே ஈகை. பசித்திருத்தல் துறவிகள் இயல்பு. அது ஒரு பெரு நிலை, அதனைவிட பெருந்தகு நிலை பசித்தவர் பசியை ஆற்றுதல். பண்டைக் காலம் பண்ட

மாற்றுக் காலம்; இக்காலம் போலப் பணமாற்றுக் காலம் அல்ல. எனவே வைப்புழிகள் (Banks) அந்தக் காலத்தில் இல்லை. ஆனால் திருவள்ளுவர் ஒரு புதிய வைப்புழியைக் கண்டு பொருளுடையார் வைத்துக் காக்கக் காட்டுகிறார். அது எது? அதுவே பசித்தவர் ஒட்டிய வயிறு.

*ஆற்றுவர் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை*
*மாற்றுவார் ஆற்றலின் பின். 225*

*அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்*
*பெற்றான் பொருள் வைப்புழி. 226*

### புகழ்

நல்ல ஒருவனைக் கொண்ட குடும்பம் புகழ்பெறுகிறது; நல்ல ஒரு தொண்டனைக் கொண்ட ஒரு சமுதாயம் புகழ் பெறுகிறது; நல்ல ஒரு விஞ்ஞானி, மெய்ஞ்ஞானியைத் தந்த உலகம் புகழ் பெறுகிறது. இப்படி எப்புகழையும் தராது வெறும் எலும்புதோல் உடம்பைக் கொண்டு உண்பதும் உறங்குவதுமே வாழ்வாகக் கொண்டவர்களை இந்த உலகம் சுமையாகக் கொள்ளும். மக்கள் பெருக்கம், வேலையில்லாத் திண்டாட்டம், உணவுப் பற்றாக்குறை, கலப்படம் என உலகச் சுமை பல இத்தகையோராலேயே உருவாகிறது என நெடுநோக்கும் பொதுநோக்கும் கொண்டு வள்ளுவர் பின்வரும் குறளில் தன் கருத்தைப் பொதிந்து வைத்துள்ளார்.

*வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா*
*யாக்கை பொறுத்த நிலம்.*

"பிறனில் விழைகின்றவன் எப்போதும் அழியாமல் நிற்கும் பழியை அடைவான் (145) என்று திருவள்ளுவர் கூறியுள்ளார். ஆனால் பிறனில் விழையும் குற்றம் உடையவர்கள் நகரங்களில் பழிக்கு ஆளாவதில்லை; அவர்களில் செல்வாக்கு உடையவர்கள் செய்தித்தாள்களால் புகழ் பெறுகின்றார்கள். பழி மறைகின்றது. ஒறுத்தல் செய்யாமல் பொறுத்தவர்க்குப் பொன்றுந்துணையும் புகழ் உண்டு (156) என்று திருவள்ளுவர் அறிவுறுத்தி யுள்ளார். எள்ளளவும் பொறுமை இல்லாதவர்களா யினும் பலரையும் ஒறுத்துத் துன்புறுத்துகிறவர்கள் ஆயினும், செல்வமும் செல்வாக்கும் கொண்டு புகழ் தேடுகின்றவர்களுக்கே செய்தித் தாள்களின்

துணையால் பெரும்புகழ் கிடைக்கக் காண்கிறோம். பிறர் பொருளை வெளவிப் பழியான செயல்களைச் செய்யக் கூடாது என்றும், செய்தால் சிறந்த அறிவும் பயனற்றதாகும் என்றும் (172, 175) திருவள்ளுவர் அறிவுரை கூறியுள்ளார். எவருடைய பொருளையும் வெளவி எவ்வாறோ செல்வராய் முன்னேறிய பிறகு, உலகம் அவரைப் புகழ்ந்து பெருமைப்படுத்தவும் அவருடைய அறிவாற்றலைப் போற்றவும் காத்திருக்கிறது."

- டாக்டர் மு. வரதராசனார்,
திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், பக். 378.

எனப் 'புகழ்' இந்தக் காலத்தில் புன்மையரும் பெறத்தக்கதாய் ஆகிவிட்ட அவலத்தை மு.வ. எடுத்துரைக்கிறார்.

ஆனால் தாம் கூறும் எந்தக்கருத்தும் காலம், இடம் கடந்து வாழுமாறு பொதுமை உத்தியால் உரைக்கும் திருவள்ளுவர் மேலே மு.வ. கூறிய குறைகள் எதுவும் பற்றாதவாறு தாம் குறிப்பிடும் புகழுக்குத்தக்க அடைமொழிகள் தந்து அக்குறைகளைத் தவிர்க்கிறார்.

ஒன்றா உலகத்து உயர் புகழ் (233) நிலவரை நீள்புகழ் (234) உடல் அழிவதால் அமையும் புகழ் (நத்தம் போல் கேடு), உயிர் அழிவதால் அமையும் புகழ் (உளதாகும் சாக்காடு) (235), இறந்த பின்னும் செல்வம் செல்வாக்கு எல்லாம் இழந்தபின்னும் தொடர்ந்து நிற்கும் புகழ் (238) என்ற வள்ளுவர் மொழிகள் காலங் கடந்து வாழும் வாய்மொழிகளே ஆகும்.

**துறவறம் – அருள் உடைமை**

'அன்பு இல்லறத்தின் அடிப்படை; அன்பின் வழியதாகிய அருள் துறவறத்தின் அடிப்படை. அருளென்னும் அன்பின் குழவி' என்பார் வள்ளுவர். இல்லறத்தில் கனிந்த கனியே துறவறம்.

துறவறத்திற்கு அடிப்படை அருள், மனத்தாலும் உடலாலும் எந்த உயிர்க்கும் எப்போதும் துன்பம் செய்யாமையும், எந்த உயிர் துன்புற்றாலும் அதற்கு உதவுதலுமே அருள் ஆகும். இதுவே அறநெறி ஒழுக்க வாழ்வாகும். இந்நெறி பற்றுவோரே இறைக்காட்சி பெறுவர். இதுவே மானிடப் பிறவியில் பெறும் பேறுகளில் எல்லாம் மேலோன பேறு; மேன்மையான செல்வம்.

அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் (241) பல்லாற்றான் நாடினும் அஃதே துணை (242), அல்லல் அருள் ஆள்வார்க்கு இல்லை (245) என்பன வள்ளுவர் அருள்பற்றி வழங்கும் நிலைத்த உண்மைகள்.

எல்லா உயிரும் இறை உருவே என்ற அருள் உடையார் தன் ஊன் பெருக்கிற்குப் பிற ஊன் உண்பரோ (241), தன் நாச்சுவைக்காகப் பிற உயிர் கொல்வரோ, பிற உயிர்த்துயர் கண்டு தன் துன்பம் போல் உணரும் அருள் ஆள்வார் பிற உயிர்க்குத் துன்பம் செய்வரோ (257)!

தனக்குப் பிற உயிரால் வரும் துன்பத்தைப் பொறுத்தலும், தான் பிற உயிர்க்குத் துன்பம் செய்யாமையும் தவம் எனத் தவத்தின் இலக்கணம் இது எனத் தெளிவு செய்கிறார் திருவள்ளுவர். இங்குக் காவி தரித்தல், பல்கால் நீராடல், இப்படி இப்படித் தியானம் செய்தல், இன்னின்ன மந்திரம் ஓதுதல், இன்னின்ன தெய்வங்களை நினைத்தல் என எல்லைக்குட்பட்ட உருவ, உடை, ஒழுக்கங்களைத் தவிர்த்து என்றும் நிற்கும் உண்மையை மட்டும் எடுத்துரைத்தமை வள்ளுவர்தம் பொது நிலை உத்தி நோக்காகும்.

அப்படிக் குறிப்பிடாதது மட்டும் அல்ல அப்புறக் கோலங்கள் தவங்கள் ஆகா என்று மறுத்தும் கூறுகிறார்.

'மழித்தலும் நீட்டலும் வேண்டா' 280

'பிறப்பறுக்கல் உற்றார்க்கு உடம்பும் மிகை' 345

எனவே எளிமையான வாழ்வாக அவர் வாழ்வு அமைய வேண்டும். எளிமை மேற்கொள்ளவே உணவில் அளவு, உடையில் அளவு, உறவில் அளவு, உறையுளில் அளவு, உறக்கத்தில் அளவு என அளவாக எண்ணி வாழ்தல் அவர்க்கு அமையும். எனவே பொருளாசை, பெண்ணாசை, பொன்னாசை, புகழாசை அவரைப் பற்றா. இத்தகு ஆசைகளைத் தூண்டும் களவு, களங்கம் அவர் நெஞ்சில் தோன்றா.

எது வாய்மை? உள்ளதைச் சொல்வதா? நல்லதைச் சொல்வதா? நல்லதைச் சொல்வதே வாய்மை என்கிறார் திருவள்ளுவர். 'உள்ளது' என்ற ஓர் கருத்து கால இடங்களுக்கு ஏற்ப மாறுவது. மாற்று விளைவைத் தருவது. கணை கொடிது; கேடு. யாழ்கோடு இனிது. ஏன் கலை உயிர்க்கொல்லும் யாழ் உயிர் உணர்வை வளர்க்கும் என விளைவறிந்து விழிப்பாக

வாழ்தலே நிலையான வாழ்வின் பயனாகும். எனவே வாய்மை பற்றி விளக்க வந்த திருவள்ளுவர் பொதுநிலை உத்தி வழியே தம் கருத்தைப் பின்வருமாறு அமைத்துக் கொள்கிறார்.

வாய்மை எனப்படுவ(து) யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல் 291

பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின். 292

வெகுளாமை

மனிதர்க்குத் தேவை பல. உணவு, உறைவிடம், உறவு, செல்வம், செல்வாக்குப் பெறல் இப்படித் தேவை பல. இவற்றைப் பெற ஒவ்வொரு மனிதனும் முயல்கிறான். அந்த முயற்சிக்குத் தடையாக வரும் அந்த மனிதரிடம், தடையாக நிற்கும் அந்தப் பொருளிடம் கோபம் வருகிறது. அது இயற்கை. ஆனால் அது நல்லதா என எண்ணிப் பார்க்க வேண்டும். அந்தக் கோபம் என் உடலுக்கு இன்னின்ன கேடு பயக்குமே, என் உள்ளத்திற்கு இன்னின்ன கேடு பயக்குமே! முன் கோபங்கொண்டு பெற்ற பயன் என்ன? அன்பர்கள் அகன்றனர். வம்பர்கள் தோன்றினர். நல்ல பயன் அப்படி ஒன்றும் நிகழவில்லை. கோபிக்காததால் பெற்ற பயன் பல. அன்பர் பலர் நண்பர் ஆயினர். சுற்றம் பலர் சூழ்ந்தனர். அதனால் எடுத்த காரியம் யாவினும் வெற்றி கிடைத்தது என எண்ணிச் சினத்தைத் தவிர்த்தல் வேண்டும்.

இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று 308

உள்ளியது எல்லாம் உடன்எய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின் 309

சினம் பற்றிய இந்த உண்மை எங்கும் எவர்க்கும் பொருந்தும் அல்லவா? இவற்றால் சினம் வருகிறது, இவர்க்கிடையே சினம் வருகிறது. இச்சினத்தால் இன்னின்ன விளைகின்றன. என்றெல்லாம் எல்லைக்குட்பட்ட செய்திகளை விவரிக்காமல் உண்மையை மட்டும் எடுத்துணர்த்திய திருவள்ளுவரின் பொதுநிலை உத்தி நலம் இங்கு விளங்கக் காணலாம்.

இன்னா செய்யாமை

ஒரு மாடு தன் துன்பத்தை உணர்ந்து வருந்தும். ஆனால் அது தன்னோடு வண்டி இழுக்கும் இன்னொரு மாட்டின்

கழுத்துப் புண்ணின் துயரத்தை உணராது. அவை ஐயறிவு உயிர்கள். ஆனால் ஆறாவது அறிவு பெற்ற மனிதனோ தன் துன்பத்தை மெய்ப்பாட்டுணர்வால் எளிதாக உணர்ந்து கொள்வான். தன் ஒத்த இன்னொரு மனிதன் துன்பத்தையும் தன் அனுபவ வறிவால் உணர்ந்து கொள்வான். இன்னொரு மனிதன் மட்டுமல்ல இன்னொரு மாட்டின் துன்பத்தையும் உணர்ந்து வருந்துவான். அம்மட்டோ 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்' என்று ஓரறி உயிராகிய புல்பூண்டு துயரைக் கூட உணர்ந்து வருந்துவான். இதுவே அறிவின் பயன்.

*அறிவினால் ஆகுவ துண்டோ பிறிதினோய்*
*தம்நோய்போல் போற்றாக் கடை* 315

தம் பொதுமை உத்தி புலப்பட சொல்கின்ற செய்தியை உயிர்க்கெல்லாம் என்ற உலகளாய அளவில் சொல்வது திருவள்ளுவர் இயல்பு. தன் துன்பத்தை உயிருள்ள தான் உணரும் இயல்பினனாகிய இம்மனிதன் எப்படிப் பிற உயிர்க்குத் துன்பம் செய்ய நினைப்பான்? நினையான் அல்லவா?

*தன்னுயிர்க்கு இன்னாமை தானறிவான் என்கொலோ*
*மன்னுயிர்க்கு இன்னா செயல்.* 318

இயற்கை நியதி வினைக்கு ஏற்ற விளைவைத் தவறாமல் தருவது. முற்பகல் செய்யின் அதற்கு ஏற்பப் பிற்பகல் விளையும். இது உண்மை. இந்தத் தெளிவுடையோர் பிறர்க்கு இன்னா செய்ய மாட்டார். அதுமட்டுமல்ல பிறர் இன்னா செய்தால் அவர்க்கு வேண்டிய ஏதேனும் ஒரு நன்மை செய்து அவர்க்கு இன்னா செய்யக் கூடாது என்ற மானுடத் தன்மையை உணர்த்துவர்.

*இன்னா செய்தாரை ஒருத்தல் அவர்நாண*
*நன்னயம் செய்து விடல்* 314

**கொல்லாமை**

உயிர் பரிணாமத்தில் ஒன்றை மற்றொன்று கொன்றோ, ஒன்றால் மற்றொன்றோ உயிர் வாழ்ந்து வந்துள்ளன. அந்தப் பரிணாம உச்சியில் தோன்றியவன் மனிதன். பழைய விலங்கினப் பதிவுகளால் அவன்பால் அமைந்துள்ள கொன்னுண்ணும் குணம் விலங்கியல்பு. ஆறறிவு பெற்ற மனிதன் தன் விழிப்புணர்வால் மனமாசகல பிற உயிர்க்குத் துன்பிழைத்தலைத் தவிர்க்க வேண்டும். நகங்கள் வளர்வது இயற்கை. அவற்றை வெட்டி வெட்டி அளவோடு வைத்துக் கொள்ளல் ஒருபுறப் பண்பாடு.

வளரும் நகம் உயிர்ப் பரிணாமத்தில் கொல்லுதலைக் குறிக்கும்; வெட்டிச் சரிசெய்யும் நிலை அந்தப் பரிணாமத்தில் தோன்றிய பண்பாட்டைக் காட்டும். ஆகவே கொல்லாமையே, பிற உயிர்க்குத் துன்பு செய்யாமையே மனித வாழ்வின் பண்பாடு; பயன்; மன மாசற்ற வாழ்விற்குப் பொய்யாமை ஒன்று; கொல்லாமை மற்றொன்று. ஆனால் விளைவுகள் எல்லாம் துன்பமற்ற இன்பத்தையே உயிர்களுக்குத் தருவனவாக இருத்தல் வேண்டும் என்பது மானுட ஒழுக்க நெறி. ஆதலின் கொல்லாமைக்கு முதன்மை இடம் தருகின்றார் திருவள்ளுவர்.

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று 323

பொதுநிலை உத்தியில் உண்மைகளை உணர்த்தும் நெறியைத் தலையாய ஒன்றாகக் கொண்ட திருவள்ளுவர் வாழ்வியல் அறத்தை இந்தக் கொல்லாமை அதிகாரத்தில் உணர்த்துகிறார்.

உலகச் சமயங்கள், சான்றோர்கள், உலகத் தீர்க்கதரிசிகள் எழுதிய மறைகளின் சாரம் எது தெரியுமா? உழைத்துப் பெற்ற வற்றைத் தனித்து உண்டு தன்னுயிர்க்கு மட்டும் அரண் செய்யாது அதனைப் பகுத்துப் பல்லுயிரும் உண்டு, பெற்று வாழ அவற்றைப் போற்றி வாழ்தலே ஆகும். கொல்லாமை துன்பம் செய்யாமை மட்டுமன்று எல்லா உயிர்க்கும் இன்பம் செய்தலு மாகும் என்று உடன்பாட்டு முகத்தானும் எடுத்துரைக்கிறார். ‘சீவகாருண்யமே திறவுகோல்’ என்ற வள்ளலார் கண்ட அறம் இங்கு அமைந்துள்ளதை அறியலாம்.

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை 322

### நிலையாமை

வாழ்வாங்கு மன்னுலகில் வாழ வேண்டும் என்ற மண்ணுலகை, வாழ்வைப் போற்றியவர் திருவள்ளுவர். அவர் ஏன் நிலையாமை பற்றிப் பேசுதல் வேண்டும்?

“வாழும் உலகம் இத்தன்மையானது, உடல் இத்தன்மை யானது, உயிர் இத்தன்மையானது, செல்வம் இத்தன்மையானது என்று முன்னமே அவற்றின் நிலையாமையை அறிந்து கொண்டால், பிரிவோ மாறுதலோ நேர்ந்தபோது மனம் கலங்கி வருந்திச் சோர்வடைய நேராது. ஆகவே நிலையாமையை உணர்தல் வாழ்க்கையைக் கண்டு அஞ்சி ஓடுவதற்காக அன்று;

வாழ்க்கையின் தன்மையை உள்ளவாறு அறிந்து அஞ்சாமல் நின்று சோர்வற்று வாழ்க்கையை நடத்திச் செல்வதற்கே ஆகும்."

- டாக்டர் மு. வரதராசனார், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், பக். 410, 411

உண்மையை உணர்ந்து சோர்வடையாமல் வாழ்வை நடத்திச் செல்வது மட்டுமன்று நிலையாமை என்று உணர்ந்து கொண்டு அந்த உணர்வால் மனம், வாக்கு, காயங்களை, உடல், பொருள், ஆவியை உரியவாறு உரியவர்க்கு அன்பும் இன்பும் உண்டாகு மாறு வாழ்தலும் ஆகும் எனத் திருவள்ளுவர் நில்லாத வாழ்வில் நிலையான வாழ்வியலைப் புலப்படுத்துகிறார்.

செல்வம் நிலையற்றது. எனவே நிலைக்கும் செயல்களுக்கு அதனைப் பயன்படுத்துக. கூத்தாட்டு அவைக் குழாம் போல சேர்ந்த செல்வம் ஒரு காலத்தில் உடனே போய்விடும். அப்படிப் போவதற்குமுன் உரியதைச் செய்து நிலைத்த புகழ் பெறு. உயிர் நில்லாதது எனவே உயிர் இருக்கும்போது நிலைத்த நல்வினைகளை முன்கூட்டியே செய்துவிடு.

அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல் 333

நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும் 335

**துறவு**

பற்றற்றுக் குடும்பத்தில் வாழ்தல் அகத்துறவு; பற்றற்று வீட்டை விட்டு வெளியே மேற்கொள்ளும் துறவு புறத்துறவு. இந்தப் பற்றற்ற வாழ்வில் மனம் தூய்மை பெறும்; மயங்கிய மனத்திலிருந்து அறிவு தெளிவாகி உயிரை உணரும். உயிர்வழி நான் யார்? நான் எங்கிருந்து வந்தேன்? எங்கே செல்வேன்? பிறப்பு எது? இறப்பு எது? வாழ்வு எது? என்ற உண்மை ஞானம் தோன்றும். எனவே துறவும் வாழ்வில் பயனுடையதே; அதுவும் வாழ்வே. வாழ வேண்டுவதே.

வேண்டின் உண்டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல 342

யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன் 341

எல்லாத் துன்பங்களுக்கும் காரணம் யான் என்னும் அகங்காரமும் எனது என்னும் மமகாரமுமே. இவை இரண்டும் அற்றுப்போகில் உயிர்தான் தோன்றிய இடத்திற்கே போய்ச் சேரும்.

யான்என தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும். (346)

**மெய்யுணர்வு**

கடவுள் வாழ்த்தில் கடவுட் தன்மைகளைக் கூறி வடிவைக் கூறாமை அவரது பொதுநிலை உத்தி எனப் பெற்றது. அங்கு வடிவைக் குறிப்பிடவில்லை என்றாலும் பகவன், வாலறிவன், மலர்மிசை ஏகினான், தனக்குவமை இல்லாதான், அறவாழி அந்தணன், எண்குணத்தான் என 'அன்' விகுதி பெய்து அத்தகையோனின் நெறி நிற்றலே வழிபாடு என உணர்த்தினார். குணநலனை உணர்ந்து வழிபடல் பக்திநெறி.

இங்கு மெய்யுணர்வின் வழி இறையுணர்வு பெறுதல் ஞான நெறி. அதனால் இங்கு 'அன்' விகுதி எதுவும் இன்றிப் பொருள் (351), மெய்ப்பொருள் (355, 356), செம்பொருள் (358), உள்ளது (357), சார்பு என்னும் சொற்களால் குறிப்பிடுகின்றார்.

சுழன்று கொண்டிருக்கும் அணுவின் கூட்டாலாகிய பொருள்கள் உண்மையில் அணுச்சுழற்சியின் நிகழ்ச்சியே. ஒன்று மற்றொன்றாய் மாறுவதே - அவை என்றும் ஒரே இயல்பாய், ஒரே நிலையாய், ஒரே இருப்பாய், மண்டலங்களும், மணடலத்தி லுள்ள பொருள்களும் இயங்கக் காரணமாய் உள்ள பொருள் அல்ல. என்றும் வற்றா இருப்பாய், பேராற்றலாய், பேரறிவாய் தான் மாறாது மாற்றங்களுக்கு எல்லாம் காரணமாய் இருக்கும் ஒரு பொருளே பொருள் என உணரும் உணர்வே மெய்யுணர்வு. இந்த மெய்யுணர்வு பெற்றவர்கள் உண்மைக் காட்சி பெறுவர். அவர்கள் உணர்வால் இறையோடு நெருங்கி இருப்பர். கற்று ஆராய்ந்து, தெளிந்த அறிவால் உணரத்தக்க பொருள் அது.

"பொருள் என்றும் நிகழ்ச்சி என்றும் பிரித்தறிய ஒரு துல்லியமான சட்டம் (Formula) உண்டு. எது ஒன்று அசைந்து கொண்டிருக்கிறதோ அதன் தோற்றத்தில் மாற்றம் பெற்றுக் கொண்டிருக்கிறதோ அது நிகழ்ச்சி........ இறைவெளிக்கு அசைவும் இல்லை; மாற்றமும் இல்லை. ஆகவே இறை நிலைதான் (வெட்ட வெளி, சுத்தவெளி) பொருள் நிலை, இதுவே இருப்பு நிலை. தெய்வம், ஆதி, அநாதி, பூரணம், எங்கும் நிறைந்தது, எல்லாமாய்

இருப்பது, சர்வ வல்லமையுள்ளது, என்றெல்லாம் வழங்கப் படுகிறது. ஆறாவது அறிவின் நுட்பக் கணிப்பு முறையால் உலகில் காணும் எந்தச் சட்டப் பொருளையும் உயிரினத்தையும் ஆராய்ந்தால் ஒரே உண்மை விளங்கும். தோற்றத்தில் வடிவம் விண் கூட்டம். பிரிந்த நிலையில் விண். விண்ணின் மூலநிலை மெய்ப்பொருள்".

- யோகிராஜ் வேதாத்திரி மகரிஷி, திருக்குறள் உட்பொருள் விளக்கம், பக். 111, 112.

### அவா அறுத்தல்

இறை எது, இறை உணர்வின் பயன் என்ன, இறையை அறியாமையால் வரும் கேடு என்ன என்பனவற்றையெல்லாம் மெய்யுணர்வில் திருவள்ளுவர் உரைத்தார். இப்படி எல்லாவற்றுக்கும் உட்பொருளான, உள்ளியக்கமான உண்மையைத் தெளியாமலோ, பொருட்படுத்தாமலோ, மறந்தோ மனித இனம் செயல்படும் போது அது தன்முனைப்பின் வழி அவாவாக எழுச்சி பெறுகிறது. பொருளுடைமை எண்ணத்தில் 'தனது' என்றும் பிறரை அடக்கியாள எண்ணி தான் என்றும் முனைகிறது. இதுவே இருள் நிலை; மயக்கநிலை. இந்த மயக்கத்தால் மனிதன் இயற்கை நியதியை மறந்து உணர்ச்சிவயப்படுகிறான். இந்த உணர்ச்சி நிலையில் தோன்றும் ஆறு தீயகுணங்கள் ஐந்து பாவச்யெல்கள் தோன்றுவதற்குக் காரணமாக இருப்பது அவா. இவற்றை விளக்கி மானுடத்தை நல்வழிப்படுத்த திருவள்ளுவர் உரைக்கும் அறிவுரைகளே, அருளுரைகளே 'அவா அறுத்தல்' என்னும் அதிகாரத்தில் இடம் பெறுவன.

அவாவின் இயல்பை உணர்த்த எண்ணிய போது திருவள்ளுவர் எல்லா உயிரையும், எல்லாக் காலத்தையும் நினைத்துத் தம் கருத்துக்களை பொதுநிலை உத்திவழி வகுத்துரைக்கிறார்.

அவா என்பது என்ன? அனைத்துயிர்க்கும் அனைத்துக் காலங்களாக உழன்று கொண்டிருக்கும் பிறப்புக்கு எது காரணமோ அதுவே அவா.

அவாவென்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து (361)

'தூராக் குழி' என வயிற்றைப் பட்டினத்தார் பாடினார். எல்லாக் குழிகளையும் நிரப்பிவிடலாம். ஆனால் இந்த வயிறெனும்

குழியில் உணவைப் போட்டுக் கொண்டே இருக்கிறோம் நாளுக்கு மூன்று முறை, நான்கு முறை, ஐந்து முறை போடுகிறோம்.

வாழ்நாள் எல்லாம் போட்டுக்கொண்டே இருக்கிறோம் ஆனால் அது நிறைந்த பாடில்லை. தூராக்குழியாகவே உள்ளது. அப்படிப்பட்டதே அவா. மனத்தின் ஆவலை நிறைவு செய்ய நிறைவு செய்ய அது நிறைவுறுவது இல்லை. வேண்டும், மீண்டும் வேண்டும், இது வேண்டும், அது வேண்டும் என்று தூராக்குழி போல் உள்ளது. அதனால் அதனை 'ஆரா இயற்கை அவா' என்கிறார். எனவே என்றும் நிறைவுறாத அவாவை நீக்கினால் மனம் நிறைவு உறும். மனஅமைதி நிலவும். அதுவே முத்தி நல்கும்.

**ஊழ்**

இறையாற்றல் பிரபஞ்சத்தை ஓர் ஒழுங்கு நியதியில் இயக்குகின்றது; அந்த ஒழுங்கு மனத்தால், சொல்லால், செயலால் செய்யப்பெறும் ஒவ்வொரு செயலுக்கும் உரிய விளைவைத் தக்க காலத்தில் தக்கவகையில் தருகிறது. இதுவே 'ஊழ்' என்பதாகும்.

பெற்றோர் அவர்க்கும் முன்னோர் செய்த பண்புச் செயல், பழிச்செயல் பதிவுகளாக ஒவ்வொருவருடைய கருமையத்தில் இருந்து கொண்டு தக்க காலத்தில் தக்க வகையில் விளைவைத் தந்து கொண்டிருக்கிறது. மேலும் அவரவர் எண்ணும் எண்ணம், சொல்லும் சொல், செய்யும் செயல் இவைகளும் விதைகளாகப் பதிவாகித் தக்க காலத்தில் வினையாக விளைகிறது. எனவே இத்தகு ஊழின் ஆற்றலை உணர்ந்து நல்லன எண்ணி, நல்லன சொல்லி, நல்லன செய்து வாழ்வதே நன்று என்று பத்துக் குறள்களில் வலியுறுத்துகிறார். எனவே வினைக்கேற்ற விளைவைத் தக்கவாறு தரும் ஒரு நீதிபதி உண்டு என்பதை மனிதர் உணர வேண்டும். அந்த நீதிபதியே மெய்ப்பொருள், செம்பொருள், இறைநிலை வகுத்தான்.

> வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
> தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.

இவ்வாறு மனம் தூய்மையுற்று அன்பாய் விரிந்து, அருளாய்ப் பரந்து, மெய்யுணர்வாய் வீடுபேற்றடையும் நிலையைப் பல கோணங்களில் தம் பொதுநிலை உத்திவழி திருவள்ளுவர் புலப்படுத்துகிறார்.

# பொருள்

பொருள் பற்றிய சித்தாந்தங்கள் பல அவ்வப்போது காலத்திற்கு ஏற்பத் தோன்றியுள்ளன. பொருட் சிந்தனையாளர்கள் பலரும் தத்தம் பொருள் கொள்கைகளை அவ்வக்காலப் பொருளாதாரச் சிக்கல்களை நோக்கி உருவாக்கியுள்ளனர். பொருளாதார வரலாறு குறிப்பிடும் எந்த அறிஞர் கொள்கைகளையும் திருவள்ளுவர் குறிப்பிடவில்லை. இனம், மொழி, நாடு, காலம் கடந்து என்றும் எங்கும் எவர்க்கும் வழிகாட்டும் அடிப்படைப் பொருளாதாரக் கொள்கைகள் அனைத்தையும் தருவதில் திருவள்ளுவரது பொதுமை உத்தி புலப்படக் காணலாம்.

> "இனம், மொழி, நாடு இவற்றைக் கடந்து காலத்தை வென்று 'பொதுமறை'யாகப் பொலிகின்ற இவ்வுத்தர வேதத்தில் கூறப்படுகின்ற பொருளியல் கருத்துக்கள், பொருளியல் வரலாற்று நூல்கள் கூறுகின்ற எந்தத் தனிப்பட்ட குழுவினரது கொள்கைகளையோ எந்தத் தனிப்பட்டக் குழுவினைச் சேர்ந்த வல்லுநரது கொள்கைகளையோ குறிப்பிடவில்லை. திருக்குறள் வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறு பொருளியல் சித்தாந்தக் கண்ணோட்டமுடையவர்களும் ஏற்றுக் கொள்ளக்கூடிய தத்துவத்தைக் கூறி ஒரு நடுநிலைப் பொருளியல் தத்துவத்தையும் கலப்புப் பொருளியல் சித்தாந்தத்தினையும் வழங்குகிறது."
>
> - டாக்டர் அ. இராமசாமி, வள்ளுவர் வகுத்த பொருளியல், 1975, ப 2. திருக்குறள் ஆய்வு வெளியீடு, மதுரைப் பல்கலைக்கழகம்.

திருவள்ளுவர் அரசு, அரசு உறுப்புக்கள், குடிமக்கள் என மூன்று நோக்குகளில் பொருட்பாலை வகுத்தும் தொகுத்தும் எழுதியுள்ளார். அரசு நாட்டமும், மக்கள் ஆக்கமும் பொருளை நோக்கியே செல்வதால் 'பொருட்பால்' என்று எண்ணி இதனை அமைத்து உரைத்துள்ளார். 'அறம் பொருள் இன்பம்' நடுவணாது எய்த இருதலையும் எய்தும் என்னும் தொடர்களும் இந்த உண்மையை உணர்த்தும்.

"There is an underlying vein of perneality, universality and robust dynamism in Tiruvalluvar's ideas on the basic motivations of economic progress. These ideas are refreshingly original and surprisingly modern in the context of corrent Gruith Theomes"

- Dr. B. Natarajan, Relevance of Valluvam to modern Political Economic, 'வள்ளுவர் வகுத்த அரசியல்', ப. 62.

"திருவள்ளுவர் பொருட்பாலில் கூறுவது நல்லநாட்டின் வாழ்க்கையே ஆகும். ஒரு நாட்டின் வாழ்க்கை அந்த நாட்டுப் பொருள் வளத்தையே பெரும்பாலும் அடிப்படையாகக் கொண்டிருப்பதால், பொருளிலேயே அதைச் சுட்டிக் கூறியுள்ளார் ........ நாட்டு வாழ்க்கை என்றோ அரசியல் என்றோ கூறின் அது யாரோ சிலருடைய பொறுப்பு என்று பலரும் ஒதுங்குவர். அரசியல் அல்லது நாட்டு வாழ்க்கை என்பது சிலருடைய பொறுப்பில் உள்ளது உண்மைதான். ஆனால் அதனால் மற்றவர்களுக்குப் பொறுப்பில்லை என்று சொல்ல முடியாது. மற்றவர்களுக்கு நேர்ப் பொறுப்பு இல்லையானால் மறைமுகப் பொறுப்பு உண்டு. இருவகைப் பொறுப்பையும் ஒட்டியே நாட்டு வாழ்க்கையாகிய அரசியல் நடைபெறுகிறது. பொருள் என்று குறிக்கும்போதுதான் இந்த உண்மை தெளிவாகின்றது. அரசியலில் வெளிப்படையாக நேர்பொறுப்பு ஏற்று நடத்துவோர் அடிக்கடி நாடி அமைவது பொருள்தான். மற்றவர்கள் உழவும் தொழிலும் செய்து நாடி நிற்பதும் பொருள்தான்"

- டாக்டர் மு. வரதராசன், 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்', ப. 90, 91

திருவள்ளுவருடைய பொதுநிலை உத்தியை உணர்த்துமாறு டாக்டர் அ. இராமசாமி குறள் கூறும் பொருளியல் என்ற கட்டுரையில் பின்வரும் கருத்தைக் கூறுகிறார்.

"ஒவ்வொரு தனிமனிதனின் நலத்தின் அடித் தளத்தில் எழுதுவதுதான் ஒரு நாட்டின் நலன்; எனவே, தனி மனிதன் ஒருவனுக்குப் பொருந்துகின்ற அத்துணை நெறிகளும் விதிகளும் சமுதாயம் முழுமைக்கும் பொருந்த வல்லது" என்பதாகும். எனவே இவரது (திருவள்ளுவருடைய) முறையை inductive method i.e.

from particular to general என்று கொள்ளலாம். Individualistic ideas என்கின்ற இக்கொள்கையைத்தான் ஜீன் போடினும், ஜே.எஸ். மில்லும் வலியுறுத்து கின்றனர்........ தனிமனிதன் ஒருவனுக்கு எந்த ஒரு பொருளியல் கொள்கை நல மளிப்பதாக அவனது நல்வாழ்வை வளப்படுத்துவதாக அமைகின்றதோ அதே பொருளியல் சித்தாந்தம் அந்த நாட்டின் சமுதாயம் முழுமைக்கும் நலமானதாக அமையும் என்று எண்ணி அதன் அடிப்படையிலேயே தங்கள் கொள்கைகளை வலியுறுத்திச் சென்றனர். இந்தத் தத்துவத்தின் அடிச்சுவட்டை நாம் குறளில் காண்கிறோம்"

- டாக்டர் அ. இராமசாமி, வள்ளுவர்
வகுத்த பொருளியல், ப. 6

நிலம், உழைப்பு, முதலீடு, உற்பத்தி, பயன்பாடும் பங்கீடும், இலாபம், வணிக நிர்வாகவியல், சமதர்மப் பொருளாதாரம், பொதுவுடைமைப் பொருளாதாரம், தர்மகர்த்தா பொருளாதாரம், நிதிநிலைத் திட்டமிடல், நன்னல அரசு, பசுமைப் புரட்சி, உழைப்புக்குச் சமுதாய மதிப்பு, கூலி, ஆக்கல், சேர்த்தல், காத்தல், மனிதவள மேம்பாடு எனப் பல நோக்கில் திருவள்ளுவர் பொருளாதாரச் சிந்தனை அமைந்துள்ளது.

திருவள்ளுவர் பொருட்கொள்கையின் அடிப்படையாக அறத்தைக் கொள்கிறார். எப்படியும் வாழலாம், வளரலாம் என அறம் அல்லா நெறிகளுக்கு அப்பாற்பட்டவர் திருவள்ளுவர். இப்படித்தான் வாழவேண்டும் எனும் அறம், அன்பு, அருள், அறிவு நெறிகளின் அடிப்படையிலேயே அவர் எண்ணம் செல்லும்.

அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல் 755

என்பது அவர் பொருளாதாரக் கொள்கை.

'வல்லரசு ஆவது ஒன்றே பொருளாதாரக் கொள்கை அதற்கு நல்வழி தீவழி எதுவானாலும் இருக்கலாம்' என்னும் ஜெர்மன் பொருளாதார நிபுணர் ஷ்மாலர் கருத்துத் திருவள்ளுவருக்குப் பொருந்தாது. அது தனி நோக்கு உடையது. பொதுநிலை நோக்குடைய வள்ளுவர் நல்வழியிலே பொருள் ஈட்ட வேண்டும் என்றும் நோக்கினார்.

தீதின்றி வந்த பொருளே அறன் ஈனும் இன்பம் ஈனும் (754) என்பர். 'செய்க பொருளை' என்று தான் சொன்னார்; பெருக்குக பொருளை என்று சொல்லவில்லை. உழைத்துப் பொருளதிகாரத்தில் உயர்க என்பதே திருவள்ளுவர் கருத்து.

எல்லாவற்றிற்கும் அடிப்படையான ஒன்றை ஒன்று கொன்று தின்னும், ஒரு உயிருக்கு உரிய பொருளைப் பறித்துத் தின்னும் நிலையைக் கடந்து பயிரிட்டு உழைத்து உண்ணத் தொடங்கிய மனிதனான காலம் தொட்டு இன்று வரை தொடர்ந்து வரும் தொழில், சமுதாய வாழ்வுக்கு, வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்த தொழிலாகிய உழவையே தலையாய தொழில் என எண்ணி அதனையே திருவள்ளுவர் விளக்கி உரைக்கிறார். உணவு, உடை, மரத்தொழில் முதலியவற்றுக்கு உழவு மூலமாக உள்ளது மட்டும் அன்றி எத்தொழில்களும் அதனுள் அடங்கும் குறிப்பும் உள்ளது. 'சொல்லேர் உழவர்' 'வில்லேர் உழவர்' எனச் சொல்தொழில் வில்தொழில் முதலிய வற்றையும் உருவத்தால் 'ஏர் உழவர்' என்று உரைப்பது காண்க. இதனால்தான் 'சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்' என்கிறார் (1031). 'உழவு ஒரு பிழைப்புத் தொழில் அன்று; அது ஒரு வாழ்க்கை முறை.

நிலத்தின் எந்தப் பகுதியும் தரிசாகக் கிடக்கக் கூடாது. என்பது தற்கால வணிக இயலாரின் கொள்கை. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பேயே திருவள்ளுவர் இந்தக் கருத்தை அழகாக இலக்கிய நயத்தோடு புலப்படுத்தி உள்ளார்.

'மனிதனே! பொருள் இல்லை; தொழில் இல்லை என்று வருந்திச் சோம்பி இராதே. உன்னைச் சுற்றிப்பார். நான் (நிலம்) எங்கெங்கெல்லாம் தரிசாகக் கிடக்கிறேன். எண்ணுக. புதிய புதிய வழியில் எண்ணுக. புதிய புதிய நெறியில் உழுது பயிரிடுக. ஒன்றுக்குப் பத்தாக உனக்குப் பயன் தருவேன். இப்படி அருகிலேயே பொருளாக்கிப் புகழோடு வாழ வழி இருக்கும் போது 'பொருள் இல்லையே', 'வாழ வழி இல்லையே' என்று இப்படி ஏங்கலாமா என்று எள்ளி எடுத்துரைப்பது போலத் திருவள்ளுவர் பாடுவர்.

இலம்என்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலம்என்னும் நல்லாள் நகும் 1040

'அசைஇ இருத்தல்' எனும் அளபெடைத் தொடரில், இரண்டு கைகளாலும் முழங்கால்களைக் கட்டிக்கொண்டு தலை குனிந்து சோம்பித் தூங்கும் காட்சியும், அது கண்டு அவன்

மனையாள் எள்ளி இடித்துரைத்து 'எழு தோட்டம் சும்மாத் தானே கிடக்கிறது கொத்திப் பயிர் செய்' என்று கூறுவது போன்ற காட்சியும், கண் முன் தோன்றுமாறு திருவள்ளுவர் அங்கத நெறியில் அறிவுறுத்தல் காணலாம்.

எந்தத் தொழிலையும் சரியாக நிருவகித்தல் வேண்டும்; கண்காணிக்க வேண்டும்; அவ்வப்போது சென்று கணக்குப் பார்த்தல் வேண்டும். இன்றேல், ஆகாறினும் போகாறு அதிகமாகி விடும். தொழில் சீரழிந்து போகும்; இழப்புப் பெரிதும் ஏற்படும். வணிகர் முன் ஏளனத்திற்கு உரியதாகும். இந்தக் கருத்தெல்லாம் புலப்படுவதாகப் பின்வரும் குறளைத் திருவள்ளுவர் எழுதி யுள்ளார் எனக் கருதுவதில் தவறொன்றும் இல்லை.

செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும் *1039*

"சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால் உழந்தும் உழவே தலை" *(1031)* என்பதே உழவு அதிகாரத்தில் முதல் குறள். 'ஏர்' என்பது தொழில் கருவியின் ஓர் அடையாளச் சின்னம். 'உழவு என்பது தொழிலின் ஒரு அடையாளக் குறி. உழைப்பு, தொழில் இவற்றின் அடிப்படையிலேயே பொருள் உற்பத்தி, பெருக்கம் முதலியன அடங்கியுள்ளன. தொழில் உற்பத்திக்குத் தேவையான பல்வேறு மூலப்பொருள்களுக்கு உழவே, விவசாயமே அடிப்படையாக உள்ளது. இத்தகைய பயிர்த்தொழிலைச் சார்பாகக் கொண்டு (Agrobased industries) பல தொழில்கள் அமைவதால் 'சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்' என்றார். மேலும் உழவின் இந்த அடிப்படை உண்மையை வலியுறுத்தவே

பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழல் அவர் *1034*

என உழவர் அரசின் ஆற்றல் அறிகுறி எனப் புலப்படுத்தினார்.

பாகிஸ்தானுடன் எல்லைப்போர் நிகழ்ந்தபோது இந்தியப் பிரதமராக இருந்த லால்பகதூர் சாஸ்திரி 'ஜெய் கிஸான்' 'ஜெய் ஜவான்' என்று முழக்கமிட்டதை இங்கு நினைவுகூர்தல் வேண்டும்.

இல்வாழ்வுக்கு உழவு தேவை; நாட்டுக்கு வளத்துக்கு, ஆற்றலுக்கு உழவுத்தொழில் இன்றியமையாதது என எடுத்துரைத்தார் வள்ளுவர். துறவு வாழ்வுக்கும் முற்றும் துறந்த முனிவர் உயிர்வாழத் துணைநிற்பதும் உழவே எனப் புலப்படுத்த

உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டேம்என் பார்க்கு நிலை 1036

என அறிவுறுத்திப் பாடினார்.

திருவள்ளுவர் காலத்தே அந்தணர், அரசர் மேல் வருக்கம் என்றும் உழவர், விவசாயிகள் கீழ்வருக்கமாகக் கருதப்பட்டனர். 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' எனப் பிரகடனம் செய்யும் திருவள்ளுவர் சமுதாயத்தில் உழைப்பவர்க்கு வாழ்வில் மதிப்பு மரியாதையும் (Dignity of Labour) ஓர் உயர்வும் உண்டு என உணர்த்த 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின்செல்பவர்' என்றும் கூறுகிறார்.

"In his time, the farmar was a low-born; therefore farming was an inferior occupation. Valluvam derides this philosophy. By declaring farming on the noblest of professions, he confers on the farmer the right to high respect in society. Valluvam reverse the scale of economic's values. It confers dignity on labour unknown to society till then".

- Dr. B. Natarajan,
வள்ளுவர் வகுத்த பொருளியல் ப. 64

நேரிடையாக உற்பத்தி, பயன்பாடு என்றில்லாமல் மறை முகமாக நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குத் துணை புரியும் வாழ்வியல் கூறுகளையும் வாழ்க்கை நிலைகளையும் வள்ளுவர் எண்ணியுள்ளார்.

பொருளாக்கத்திற்கு உரிய காரணங்களாகத் திருவள்ளுவர் வழங்கும் குறள் கருத்துக்களைப் பொருள் சார்ந்த காரணங்கள், அறம் சார்ந்த காரணங்கள் என இரண்டாக வகுத்து நோக்குவார் 'வள்ளுவரது பொருளியலின் எல்லையும் இயல்பும்' என்னும் தம் கட்டுரையில் பேராசிரியர் மா.பா. குருசாமி. பொருள் சார்ந்த காரணங்களாக அவர் மேற்கோள் காட்டும் திருக்குறள்கள் பின்வருவன :

மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. 51

மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல். 52

ஆகாறு அளவிட்டி(து) ஆயினும் கேடில்லை
போகாறு அகலாக் கடை. 478

முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். 616

தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். 619

ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை. 594

அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல்.

ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி. 477

ஆக்கம்கருதி முதலிழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார் 463

துணைநலம் ஆக்கம் தரூஉம் வினைநலம்
வேண்டிய எல்லாம் தரும். 651

அறம்சார் காரணங்களுக்கு எடுத்துக்காட்டாக அவர் தெரிந்தெடுத்து உரைக்கும் குறள்கள்:

ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி 371

இருவேறு உலகத்(து) இயற்கை திருவேறு
தெள்ளியர் ஆதலும் வேறு. 374

அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறனறிந்து ஆங்கே திரு. 179

அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள் 178

செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி
எச்சத்திற்(கு) ஏமாப் புடைத்து 112

வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின் 120

கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர். 562

வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம். 85

காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள. 527

பொருள் ஆக்கத்திற்குப் பொருள்சார் அறஞ்சார் காரணங்களைத் திருவள்ளுவர் பொதுநிலை உத்திவழி ஆய்ந்து உரைத்தது போலவே பொருள் அழிவுக்கு ஆன பொருள்சார் அறஞ்சார் காரணங்களையும் எடுத்துரைக்கிறார்.

**பொருள்சார் காரணங்கள்**

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும். 479

உளவரைத் தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும் 480

பொருளாட்சி போற்றாதார்க் கில்லை 252

மடியுளாள் மாமுகடி என்ப 617

இலமென் றசைஇ இருப்பாரைக் காணின்
நிலம்என்னும் நல்லாள் நகும். 1040

வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்குந் திரு 519

**அறஞ்சார் காரணங்கள்**

அழுக்கா(று) உடையான்கண் ஆக்கம்போன் றில்லை 135

அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். 167

நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும். 171

வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன் 177

களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும் 283

ஆகூழாற் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி 371

செயற்பால செய்யாது இவறியான் செல்வம்
உயற்பால(து) அன்றிக் கெடும் 437

நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு 408

இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறின் சிறுகும் திரு 568

அல்லற்பட்(டு) ஆற்றாது அழுதகண் ணீர்அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை 555

அழக்கொண்ட எல்லாம் அழப்போம் 659

கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம்
நீடின்றி ஆங்கே கெடும். 566

பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும். 902

இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு 920

"பழகிய செல்வத்தைச் சூது கெடுக்கும் (குறள்கள் 933, 935, 937, 938, 939) என்றெல்லாம் வள்ளுவர் கூறுகின்றார். இவை எல்லாம் இன்றைய பொருளியல் அறிஞர்களால் பொருளியல் எல்லைக்கு வெளியே ஒடுக்கப்படுகின்ற கருத்துக்களாகும். எடுத்துக் காட்டாகச் சூதாட்டம் போல அமையும் ஊக வாணிபத்தைப் பொருளியலார் ஏற்று ஆராய்வது கவனிக்கத்தக்கது."

- பேராசிரிய மா.பா. குருசாமி, வள்ளுவர்
வகுத்த பொருளியல், ப. 30.

வருவாய்த் தோற்றுவாயில்களாகப் பலப்பொருளாதாரச் சிந்தனையாளர்களால் பற்பலவாறு எடுத்துரைக்கப் பெற்ற கருத்துக்கள் அனைத்தும் அடங்குமாறும் அனைத்துக் காலத்துக்கும் பொருந்துமாறும் தம்பொதுநிலை உத்தியால் பின்வருமாறு தொகுத்துக் கூறுகிறார் திருவள்ளுவர்.

உறுபொருளும் உல்குபொருளும் தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள். 756

நெறியற்று வரி வாங்குவதை, 'வாய்புகுவதனினும் கால் பெரிது கெடுக்கும்' என்றும் 'யானை புக்க புலம்போல' என உவமையாக்கிப் புறநானூற்றுப் புலவர் பிசிராந்தையார் பாடியுள்ளது இங்கு நினைக்கத்தக்கது.

திருவள்ளுவர் இன்னும் அழுத்தமாக அறநெறி இன்றி, வரி என்ற பெயரில் அரசனால் வசூலிக்கப்பெறும் வரி ஆறலைக் கள்வர் பாலை வழியில் செல்லும் வழிப்போக்கரிடம் தன் கையில் உள்ள வேலினைக் காட்டி மிரட்டிப் பறிக்கப்பெறும் கொள்கைக்கு ஒப்பாகும் என்று வன்மையாக அறிவுறுத்துகிறார்.

வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு. *(552)*

நன்கொடை என்ற பெயரில் அரசியல் கட்சிகள், பொதுநலம் என்ற பெயரில் அரசாங்கத்தார் பெறும் கொடைப் பொருள் களையும், பரிசுப் பொருள்கள் என்ற பெயரில் காவல் துறையினர் பெறும் பொருள்களையும் இந்தக் குறள் வழி இன்று நோக்கிப் பார்த்து எண்ணுதல் வேண்டும்.

காந்தி அண்ணலின் அறங்காவலர் (தரும கருத்தா) பொருள் முறை திருவள்ளுவர்தம் ஒப்புரவுக் கோட்பாட்டில் அமைந்திருக்கக் காணலாம். உழைத்துப் பெற்ற செல்வம் உடைய அறிஞன் ஒருவன் அச்செல்வத்தை ஊர்ப்பொது 'ஊருணி' போன்றும், 'மருந்தாகித் தப்பா மரம்' போன்றும், 'உள்ளூர் பழுத்த பயன் மரம்' போன்றும் பிற அறச் செயல்களுக்கு, தொழில்துறைகளுக்குத் தந்து அவற்றை வளப்படுத்துவான். பழுமரத்துக் கனிகள் தரும் விதைகள் வேறு பல கனிமரங்கள் தோன்றி வளர வித்தாவது போலப் பல்வேறு பொருளாதார மேம் பாட்டுக்கும் ஒப்புரவாளன் வழங்கும் பொருள் காரணமாகும்.

> "வள்ளுவர் ஒப்புரவுக் கோட்பாட்டின் சாயலைச் சமணத்தின் 'பொருள் வரைதலில்' நபிகள் நாயகத்தின் 'ஜகாத்'தில் சீனத்துக் 'கம்யூன்'களில் காந்தியடிகளின் தருமகர்த்தா கோட்பாட்டில், இன்ன பிறவற்றில் காணமுடிகிறது."
>
> - தே. வேலப்பன், வள்ளுவர் வகுத்த பொருளியல், ப. 57

இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல(து) அரசு *385*

'பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை' என்பதும் இங்கு நோக்கத்தக்கது. இந்தக் குறளில் 'காத்தலும்' என்ற வள்ளுவர் கருத்தைப் பொருளாதார நோக்கில் பின்வருமாறு தெளிவு செய்கிறார் டாக்டர் D. Bright Singh.

> ........ By 'guarding wealth' what the poet (Tiruvalluvar) means is that the capital resources of the country are to be maintained and made to grow and never allowed to be wasted. This certainly is a valuable for the India of today when instances of wastage and under - utilization of capital are becoming common

- Dr. D. Bright Singh, வள்ளுவர் *வகுத்த பொருளியல், ப. 130 - 131*

உரிமை பெற்று ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகியும் இந்திய நாடு தன் பொருளாதாரத்தில் தக்க நிலையை இன்னும் எய்த வில்லை. என்ன காரணம்? உழைக்கும் மக்கள் பலகோடி உள்ளனர். அறிவியல் துறையில் துறைபோகக் கற்றறிந்த அறிஞர்கள் பல்லாயிரம் உள்ளனர். எனினும் இந்தப் பல்லாண்டுகளில் இந்தியா பொருளாதாரத்தில் வளரும் நாடாக முன்னேற இயல வில்லை ஏன்? அவ்வப்போது பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் இடையே எழுந்த எல்லைப்போர்கள் இந்தியப் பொருளாதாரத் திட்ட வளர்ச்சி என்னும் முதுகெலும்பை முறித்துவிடுகின்றன. உள்நாட்டில் தோன்றி அழிவுதரும் தீவிரவாதிகள் செய்யும் உள் நாட்டுக் கலகங்கள் இன்னொரு காரணம். ஒரு நாடு பொருளா தாரத்தில் முன்னேற வேண்டுமானால் முதலில் அந்த நாட்டில் மக்களுக்கு அமைதியான வாழ்வு கிடைக்கவேண்டும். சட்டம் ஒழுங்கு நிலைநாட்டப் பெறல் வேண்டும். பகை போரில் இருந்து நாடு காக்கப் பெறல்வேண்டும். இவ்வாறு ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு உரிய முன்தேவைகளைத் (Pre-requisite) தொலைநோக்கில் பொது நோக்கில் வள்ளுவர் புகன்றுள்ளார்.

*பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும்வேந்தலைக்கும்*
*கொல்குறும்பும் இல்லது நாடு* 735

*ஆங்கமைவு எய்தியக் கண்ணும் பயம்இன்றே*
*வேந்தமைவு இல்லாத நாடு* 740

இந்திய அரசியலில் அடிக்கடி மாறும் ஆட்சித் தலைமையால் வெளிநாட்டு உள்நாட்டுப் பொருளாதாரக்

கொள்கையிலும் மாற்றம் ஏற்பட்டுச் சீராக முன்னேற இயலாமல் போதலைக் காண்கிறோம் அல்லவா?

'முதல் இல்லார்க்கு ஊதியம் இல்லை' என்பது ஒரு பொருளாதாரக் கொள்கை. முதல் பலவகையில் அமையும். பங்குகளாக, வங்கிக் கடன்களாக, கூட்டுறவு வழியாக - நிலமாக, கட்டிடங்களாக - இப்படிப் பல வகையில் முதல் அமையும் வாய்ப்பு உள்ளது. இவற்றுள் சொந்தப் பணம் வைத்துத் தொழில் செய்பவர்கள் போட்டி, பொறாமை, தொழிற்செலவு மிகை, வரவு குறைபாடு இவைபற்றி இந்தத் தொழில் தொல்லைகள் போராட்டங்கள் பற்றி அஞ்ச வேண்டுவதில்லை என்பது வள்ளுவர் கருத்து.

*குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்(று)*
*உண்டாகச் செய்வான் வினை* 758

காலம் அறிதல், இடன் அறிதல் என்னும் இரண்டு அதிகாரங்களும் எவ்வினை தொடங்குதற்கும், செய்தற்கும் பொருந்துமாறு திருவள்ளுவர் பாடியுள்ளது அவரது பொதுமை நிலை உத்தியைப் புலப்படுத்தும் சிறந்த காட்டுக்களாகும். இங்கு ஒரு சிறந்த தொழிலைத் தொடங்குதற்கு அவை எவ்வாறு வழி காட்டுகின்றன என்பது காணப்பெறும்.

தான் தொடங்கும் தொழிலுக்குத் தக்க காலத்தில் தொடங்க வேண்டும். தக்க காலம் வரவில்லை எனில் காலங்கருதி தயார் நிலையில் காத்திருத்தல் வேண்டும். போட்டித் தொழிலில் வாய்ப்புத் தவறிவிடும் போது வெளிக்காட்டிக் கொள்ளாமல் மீண்டும் அந்த வாய்ப்பைப் பெறும் வழிகளை மனத்தில் எண்ணித் திட்டமிட்டுக் கொண்டிருத்தல். எப்போது வாய்க்கிறதோ அப்போதே உடனே தொடங்கி விடுதல்.

தக்க இடம் தேர்ந்து எண்ணி ஒரு தொழிலை முதலிலே தொடங்கி விட்டால் வேற்றார் அதனைத் தொடங்க இயலாது போய்விடும். எந்தத் தொழிலையும் தொடங்குதற்குத் தக்கச் சூழலமைத்து இடம் வாய்க்கும் வரை பொறுத்திருக்க வேண்டும்.

*காலம் கருதி இருப்பர் கலங்காது*
*ஞாலம் கருது பவர்* 485

*ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்*
*தாக்கற்குப் பேரும் தகைத்து* 486

பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்து
உள்வேர்ப்பர் ஒள்ளி யவர் 487

எய்தற்கு அரிய இயைந்தக்கால் அந்நிலையே
செய்தற்கு அரிய செயல் 484

எண்ணியார் எண்ணம் இழப்பர் இடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின். 494

தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடம்கண்ட பின்னல் லது 491

இறுதியாகப் பொருளாதார மேம்பாடும் தொழிலும் நடுநிலையினதாக அமைய வேண்டும். கொள்ளும்போது நிறையவும் கொடுக்கும்போது குறையவும் தருவது நேர்மையான வணிகம் ஆகாது. அந்த மனநிலையில் மாறுதல் வேண்டும். எப்படி நோக்கிக் கொண்டால், கொடுத்தால் அது நடு நிலைமை யான நேர்மையான வணிகமாக, தொழிலாக அமையும்? உளவியலில் தேர்ந்த திருவள்ளுவர் இப்படிக் கூறி நடுநிலைமையை நிலைநிறுத்துகிறார். நீ எப்படிக் கொள்வாயோ அதே மன நிலையில் கொடு; நீ எப்படிக் கொடுப்பாயோ அதே மன நிலையில் கொள்' என்பதே அது.

வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின் 120

# அரசு

படைகுடி கூழ்அமைச்சு நட்பு அரணாறும்
உடையான் அரசருள் ஏறு. 381

இந்தக் குறள்வழி மூன்று கருத்துக்களைத் திருவள்ளுவர் புலப்படுத்துகிறார். உடையான், அதாவது ஆட்சிக்கு உரியவன், தலைவன் ஆவான். அவனுக்குப் படைகுடி முதலியன ஆறும் கட்டுப்பட்டு இயங்கும், இயங்குவர். அவன் இவ்வாறும் கொண்டு தான் தலைவனாய் ஆள்வன்.

எதனை ஆள்வன்? ஓர் அரசினை ஓர் நாட்டினை. ஆனால் அந்த நாடு பற்றி இந்தக் குறளில் செய்தி ஒன்றும் இல்லை. ஏதோ ஒரு நிலத்தை ஆளும் நெறிபற்றி இங்குக் கூறப்பட்டது. ஆனால் எந்தநாடு, அதன் எல்லை என்ன என்பதுபற்றிய குறிப்பு ஒன்றும் இந்தக் குறளில் இல்லை. எனவே நாடு உடைமை அன்று; அது உரிமையுடையது. அந்த உரிமையைக் காத்து நெறிப்படுத்துவது ஆளும் தலைவன் பணி.

இன்று ஆட்சியில் முதல்அமைச்சர், பிரதம மந்திரி உள்ளனர். அவர்கள் தலைமையின் கீழ் படை, குடி, கூழ், பிற அமைச்சு, நட்பு, அரண் முதலிய துறைகள் இயங்குகின்றன. நாட்டு நலம், வளம் கருதி தன் கீழ் அமைந்த பல துறைகளை நன்கு செலுத்தி நாட்டின்கண் அமைதி நிலவ செயல்புரிகிறான் ஒரு தலைவன் - அரசன்.

ஒரு குறிப்பிட்ட மொழியினர், இனத்தினர், சமயத்தினர், பண்பாட்டினர், வரலாற்றுப் பின்னணி உடையவர் ஒருமித்த கூட்டுறவே தேசிய இனமாகி, தேசியமாகி, நாடாகிறது. காட்டாகச் சமய அடிப்படையில் பாகிஸ்தானைக் குறிப்பிடலாம். மொழி அடிப்படையில் இங்கிலாந்தைக் குறிப்பிடலாம். பண்பாட்டு அடிப்படையில் பாலஸ்தீனத்தைக் குறிப்பிடலாம். ஆனால் திருவள்ளுவர் ஓர் இனம், மொழி, பண்பாடு, வரலாறு அடிப்படையில் அரசியல் சிந்தனை செய்யவில்லை. அனைத்தும் பொதுவானது அவருடையது. இந்த எல்லைக்கு அப்பால் ஒருலக ஆட்சியே அவர் உள்ளத்துக்கண்

உள்ளது. அதனாலேயே நாட்டின் எல்லை, அதன் மொழி, இனம் இவற்றைக் குறிப்பிடாமல் 'நாடு' என்ற அதிகாரத்திலும் பொதுவாக நாட்டின் இயல்பு பற்றியே பாடிச் செல்கிறார்.

மேலும் வாரிசு அரசுடைமை பற்றிய குறிப்போ சூரிய குலம், சோம குலம், அக்கினி குலம் பற்றிய குல அரசு பற்றிய குறிப்போ திருக்குறளில் இல்லை என்பதும் கவனிக்கத்தக்கது. பிளேட்டோ குறிப்பிடுவது போல இத்தனைபேர் கொண்டது, இவ்வளவு எல்லையுடையது இந்த வர்க்கத்தினது அரசு என்ற கருத்துக்குச் சிறிதும் திருக்குறளில் இடம் இல்லை என்பதும் இங்கு நோக்கத்தக்கது.

*முடியாட்சியா? இடியாட்சியா?*

வள்ளுவர் வாழ்ந்த காலத்தில் நாட்டில் முடியாட்சியும் தனி ஊர்களில் குடியாட்சியும் நிகழ்ந்தன. ஊர் மன்றங்களில் வாரியத் தலைவர்களைக் குடவோலை முறையில் தேர்ந்தெடுக்கும் குடியாட்சி முறையும் இருந்து வந்துள்ளது. எனவே திருவள்ளுவர் அரசு பற்றி எண்ணும்போது இரு ஆட்சிக்கும் உரிய தகுதியுடைய மக்களையே எண்ணுகிறார். ஆட்சிப் பொறுப்பில் அனைவரும் அமைச்சர், தூதுவர், ஒற்றர், இடித்துரைக்கும் சான்றோர் எனச் சிலர் நேரடியாக ஈடுபட்டிருந்தாலும் பலர் மறைமுகமாகப் பொறுப்பேற்றுள்ளனர். இந்த அடிப்படையில் திருவள்ளுவர் எக்காலத்துக்கும் ஆட்சிக்கு உரிய மக்கள் அறிவு நலத்தை உளப் பண்பாட்டை நெஞ்சில் நினைத்துப் பொதுநோக்கோடும் தொலைநோக்கோடும் பொதுநிலை உத்தியில் புகன்றுள்ளார்.

முடியாட்சித் தலைவனைக் குறிக்கும் மன்னன், அரசன், வேந்தன், இறைவன் எனும் சொற்களைத் திருவள்ளுவர் அரசியல், அங்கவியலுள் சில இடங்களிலேயே கூறியுள்ளார். அரசன், அரசு பற்றிக் கூறும் பொருட்பால் முதல் அதிகாரமாகிய இறை மாட்சியில் அரசர்; வேந்தன், நிலன் ஆள்பவன், மன்னன், இறை என ஏழிடங்களில் குறிப்பிட்ட திருவள்ளுவர் அடுத்து அமைந்துள்ள 'கல்வி' என்னும் அதிகாரத்தில் ஓரிடத்தில் கூடக் குறிப்பிடவில்லை. அனைத்து மக்களுக்கும் கல்வி பொது; கல்வி தேவை என்பது திருவள்ளுவர் உள்ளம்.

"இருவகை ஆட்சியிலும் அடிப்படைகள் ஒத்திருக் கின்றன. பொதுமக்களின் நன்மையைக் கருதி ஆளுதல், ஒற்றுமையை வளர்த்தல், பகையை ஒடுக்குதல், பசியும் பிணியும் நாட்டில் பரவாதபடிக் காத்தல், நீர்வளம், நிலவளம், தொழில்

வளம் ஆகியவற்றைப் பெருக்குதல், எல்லோர்க்கும் ஒத்த உரிமை வழங்கி நடுவுநிலைமை தவறாமல் முறை செய்தல் முதலான அடிப்படைகள் குடியாட்சிக்கும் வேண்டியவை; முடியாட்சிக்கும் வேண்டியவை. திருவள்ளுவர் இத்தகைய அடிப்படைகளையே விளக்கிச் செல்கிறார்.

திருவள்ளுவர் மக்களின் நல்வாழ்க்கையைக் குறிக் கோளாகக் கொண்டு பொருட்பால் எழுதியவர். ஆகையால், இந்த அடிப்படையிலேயே அவர் கருத்தைச் செலுத்தி ஆராய்ந்து கூறியுள்ளார். அவர் தமிழ்நாட்டு மூவேந்தர் மரபுகளையோ கொடி, பூ முதலியவற்றையோ கூறவில்லை. அரசர்களின் பிறந்த நாள் விழாவையும் பிற விழாக்களையும் கூறவில்லை; முடி சூட்டும் சிறப்பையும் கூறவில்லை; இறந்தபின் அடக்கம் செய்யும் வழக்கத்தையும் அதன் பிறகு உடனே மகனோ மற்றொருவனோ கட்டிலேறும் வாழ்வையும் கூறவில்லை. வேந்தனுக்கு வேண்டிய வீரத்தையும் அறமுறையையும் கூறினாரே அல்லாமல் அவன் கையில் ஏந்திய வாளையும் செங்கோலையும் புகழ்ந்து வருணிக்க வில்லை. அரசனுடைய ஆட்சிக்கு உரிய நாடு எவ்வாறு விளங்க வேண்டும் என்று கூறினாரே அல்லாமல், அரசன் வாழும் அரண்மனை எவ்வாறு புனையப்பெற வேண்டும் என்று கூறவில்லை. ஆட்சி முறைக்கு உறுதுணையாகும் சுற்றமும் நட்பும் பற்றிக் கூறினாரே அல்லாமல், அரச குடும்பத்தில் பெண் கொண்டும் கொடுத்தும் சுற்றத்தவரானவர்களைப் பற்றியும் கூறவில்லை. மக்களின் வாழ்க்கையை விளக்கி வழிகாட்டப் புகுந்த பெரியோர் ஆதலின் அவர் பொருட்பாலில் விளக்கியுள்ள அரசியல் கருத்துக்கள் எந்த ஆட்சிமுறைக்கும் அடிப்படையாக வேண்டிய கருத்துகளாக விளங்குகின்றன. முடியாட்சிக் காலத்தில் மன்னர்கள் போற்றத்தக்க உண்மைகளாக இருந்தமை போலவே, குடியாட்சிக் காலத்திலும் மன்றத் தலைவர்களும் மன்ற உறுப்பினர்களும் போற்றத்தக்க உண்மைகளாக இருக்கின்றன. இனி வருங்காலத்திலும் என்றென்றும் போற்றத்தக்க வாய் மொழிகளாக விளங்கும்".

- டாக்டர் மு. வரதராசனார், திருவள்ளுவர்
*அல்லது வாழ்க்கை விளக்கம், பக். 94-95.*

நாடு

நாடு நிலவளம், நீர்வளம், நல்ல அறிவார்ந்த செயல் திறனும் சிந்தனைத் திறனும் உள்ள மக்கள், சட்டம் ஒழுங்குக் கேடில்லாமல் அமைதி நிலவும் நிலை சிறப்பாக, எல்லாத்

தேவைகளையும் நிறைவு செய்து கொள்ளும் நாடாக அமைய வேண்டும் என்பதே நாடு பற்றித் திருவள்ளுவர் கருத்து.

இயற்கை வளம் அல்லது மூலப்பொருள் இவற்றுள் காடு, கனி வளம், பயிர் விளைவுகள் முதலிய எல்லாம் அடங்கும். அப்பொருள்களில் சிலவற்றை நேரிடையாக அப்படியே பயன்படுத்தலாம்; இவற்றை மூலப்பொருளாக வைத்து அவற்றின் வழி மக்களுக்கு எவ்வெவ்வாறெல்லாம் பயன்படுத்தலாம் எனச் செய்பொருளாக உருவாக்குவதற்குரிய தொழில், வாணிப, திட்ப நுட்பங்களை வகுத்துத் திட்டமிடும் தக்கார் (Experts) அத்தகு தொழில்களுக்கு, தொழிற்சாலைக்கு வேண்டிய முதலீடு செய்யும் நிறைநெஞ்சமும் நிறைசெல்வமும் உடைய செல்வர் ஆகிய மூவகை வாய்ப்புகளும் ஒன்று சேர்ந்து சிறந்திருத்தலே ஒரு நாடு எனப் பெறும்.

தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு. 731

மழை பொய்த்தல், வெள்ளம், பூகம்பம், அகதிகள் - இப்படி நேரும் இயற்கைக் கேடுகளைத் தாங்கவல்ல பொருள் வளமும்; பகை, போர், உள்நாட்டுக் கலகம் முதலிய காலங்களில் அரசுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து அரசை நிலைநிறுத்தும் குடிகளும் கொண்டது நாடு.

பொறை ஒருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு
இறையொருங்கு நேர்வது நாடு 733

நாட்டின் நாடா வளம் ஒரு வகையில் நாட்டு ஆட்சியை நிலைநிறுத்துகிறது; இன்னொரு வகையில் நாடு மெலியாமையும் வேண்டும். நாட்டை மெலிவுறுத்துவன பசி, பிணி, பகை, பல்குழு, பாழ் செய்யும் உட்பகை, ஆட்சியில் சிக்கல் உண்டாக்கும் தீவிர வாதிகள் கூட்டம் முதலியனவாகும். இவை எல்லாம் இல்லாதவாறு, அமைந்ததே ஒரு நல்ல நாடு. நீர் வளம், நில வளம், காட்டுவளம் - இவ்வளங்களும் வாழ்வும், பகைவர் நெருங்குவதற்கு அரியதாக நாட்டை வலிமையுறுத்தும் அரணும் அமைந்தது நாடு. இவ்வாறு, எல்லா வளமும் பலமும் அமைந்திருந்தாலும் நாட்டின் ஆட்சித் தலைவன், அமைச்சு, தூது, நட்பு, குடிமக்கள் ஆகிய அனைவரின் ஒத்துழைப்போடு கூடிய நல்லாட்சி இல்லையாயின் பயன் இன்றாம்.

இவ்வாறு நாடு பற்றிய தம் சிந்தனையைப் பொதுநிலை உத்திவகையால் பொதுமைப்படுத்தி வள்ளுவர் வழங்குகிறார்.

அரணைப்பற்றி வள்ளுவர் சுருக்கமாவே பேசுகிறார்— அரண் பற்றிய பொதுவான சில அடிப்படை உண்மைகள் காலம் கடந்தும் உண்மையாக நிலை நிற்கலாம். வள்ளுவர் அத்தகைய உண்மைகளையே கண்டு கூறுவதாகத் தெரிகிறது.

'சிறுகாப்பிற் பேரிடத்தது ஆகி உறுபகை
ஊக்கம் அழிப்பது அரண்" 744

இந்தக் குறள் இத்தகைய கருத்தொன்றைப் பேசுகிறது. ஆதலால், 'நிலவரை இறந்த குண்டுகண் அகழி' எனவும், 'வான் தோய்வன்ன புரிசை' எனவும், 'விசும்பின் மீன் பூத்தன்ன ஞாயில்' எனவும், 'கதிர் நுழைகல்லா மரம்பயில் கடிமிளை' எனவும், 'அருங்குறும்பு உடுத்த பேரெயில்' எனவும் வள்ளுவர் எதையும் எடுத்துப் பேசவில்லை.

- முருகரத்தினம், அறிஞர் திருக்குறள் கூறும் அரசு, ப. 38, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1982.

'உருவல் அரண் இரண்டு' என்பது திருவள்ளுவ மாலை (போக்கியார், 26). போக்கியார் பாடல் கருத்தின்படி நாடு, அரண் இரண்டும் உருவவல் அரண்களாகும். போக்கியர் கருத்தை எண்ணிப் பார்த்தால் ஓர் உண்மை புலப்படும்.

அது இதுவே. பகை அகப்பகை, புறப்பகை என இரண்டாகும். ஒரு நாடு இந்த இரண்டு பகைகளிலிருந்தும் காத்துக் கொள்ளல் வேண்டும். இவ்வகையில் அகப்பகையி லிருந்து காத்துக்கொள்வதை 'நாடு' என்னும் அதிகாரமும், புறப்பகையிலிருந்து காத்துக் கொள்வதை, 'அரண்' என்னும் அதிகாரமும் தெளிவு செய்வதாகக் கொள்ளலாம்.

இங்குத் திருவள்ளுவர் கருதும் அரண் தாங்கும் அரணே அன்றித் தாக்கும் அரண் அன்று. நகையேயும் பகையை விரும்பாத, 'பகையெனும் பண்பிலதனை' (871), 'இகல் என்னும் ஒவ்வா நோய்' (853) எனும் நெஞ்சம் கொண்ட அருளாளராகிய வள்ளுவர், பகையிலிருந்து காத்துக்கொள்ளும் அரணையே, படையையே, தூதையே, ஒற்றையே, நட்பையே தம் அரசியல் கருத்துகளாகக் கூறி, இன்றைக்கும் தம் கருத்து வாழ்வதாக்கிய பாங்கில் அவரது பொதுநிலை உத்தி புலப்படுகிறது.

"அழிவின் அவைநீக்கி ஆறுஉய்த்து......" 787

"அழச்சொல்லி அல்லது இடித்து........" 795

"பிரித்தலும் பேணிக்கொளலும் பிரிந்தார்ப்" 633

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது. 685

கடன்அறிந்து காலம் கருதி இடன்அறிந்து
எண்ணி உரைப்பான் தலை. 687

தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு. 688

வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு
அனைவரையும் ஆராய்வது ஒற்று. 584

பேராண்மை என்ப தறுகண்ஒன்று உற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு. 773

போரில்லா நல்லுலகை, இன்றும் அறிஞர் சிந்தனை ஒருலக அரசை நோக்கி நடைபோடுகிறது. 'ஒருலகக் கூட்டாட்சி வலுவாய் வேண்டும்' எனப் பாடுவார் வேதாத்திரி மகரிஷி. உலக மக்கள் எண்ணம் எல்லாம் எழுத்தெல்லாம் ஒருலகக் கோட்பாட்டையே, வாழ்வையே வலியுறுத்துவனவாக எழுந்துள. நம் ஆராய்ச்சி நிறுவனமும் 'உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமாக' (International Institute of Tamil Studies) அமைந்திருத்தல் கண்கூடு. திருவள்ளுவர் கோட்பாடெல்லாம் போரற்ற, பேராசையற்ற, பொறாமையற்ற, பொய்யற்ற, கொலையற்ற 'எல்லா உயிரும் இன்புற்று வாழ' வழிகாட்டும் உலகப் பொதுமை ஆகும். இவை அனைத்தையும் எண்ணிப் பொதுநிலை உத்தி வகையால் தம் குறளை இயற்றியுள்ளார்.

பகை என்பது ஒரு புற்று நோய். உலகத்துயிர்களை அது அழித்துவிடும். அது வேண்டா. அந்த நோய் நீங்கின் உலகம் ஒரு குலம் ஆகும். தெளிவும் செயலும் மக்களிடையே தோன்றும். இன்று பகைக்கிடையே வாழ்வோர் அவ்வப்போது பெறும் இன்பம் சிறு இன்பமே; நிலையானது அன்று. பகை அச்சத்தால் அந்த இன்பம் இடைஇடையே தனி மனித வாழ்விலும் சமுதாய வாழ்விலும், உலக வாழ்விலும் அற்றுப்போகும். இன்பத்துள் இன்பம் இடையறா இன்பம் இகல் என்னும் பகை இல்லாத போதே நிலைக்கும். மானுட வாழ்வின் குறிக்கோளான மெய்ப்

பொருள் உணர்வும் வற்றிப்போகும் பகை உணர்ச்சி உடையவர் உள்ளத்தில்.

இகல்என்ப எல்லாஉயிர்க்கும் பகல் என்னும்
பண்பின்மை பாரிக்கும் நோய். 851

இகல்என்னும் எவ்வநோய் நீக்கின் தவலில்லாத்
தாவில் விளக்கம் தரும் 853

இன்பத்துள் இன்பம் பயக்கும் இகலென்னும்
துன்பத்துள் துன்பம் கெடின் 854

மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார் இகல்மேவல்
இன்னா அறிவி னவர் 857

பகைஎன்னும் பண்பிலிதனை ஒருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று 871

"இன்று போர் என்பது எங்கோ ஏதோ இரு நாடுகளுக் கிடையே நடைபெறும் ஒன்றன்று; இன்று போர் என்றால் உலகப் போர்...

ஆகவே போர் இன்றைய காலத்துக்கு ஒவ்வாதது; ராஜ மண்டலமும் திக்குவிஜயமும் சக்கரவர்த்தியும் அணுகுண்டு ஊழிக்கு அடுக்காதவை. ஆகவே இவற்றுக்குக் காரணமான பகையும் அடுக்காதது. இன்றைய உலகுக்கு வேண்டுவது வள்ளுவர் வகுத்தது போன்ற நட்பே.

செயற்கரிய யாவுள நட்பின்; அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு 781

கவுடல்யம் போன்று வள்ளுவமும் பழமையானதுதான். ஆனால் வள்ளுவம் இன்றைப் புத்துலகில் புதுமைக்கும் புதுமையாய்ப் பேர்த்துமப் பெற்றியதாய் விளங்குகிறது.

இதன் காரணம் கவுடல்யர் முதலியோர் அர்த்த சாத்திரத்தில் அமைத்த இந்தியச் சிந்தனைகளை வெறுத்து ஒதுக்கி எல்லார்க்கும் என்றும் பொருந்துவதான பொருளாதார அரசியல் கருத்துக்களைத் தொலைவாக, பொதுவாக நோக்கியதே ஆகும். இவ்வாறு அரசியல் சிந்தனையையும், செயற்பாட்டையும் திருவள்ளுவர் பொதுநிலை உத்திவழிப் புலப்படுத்துகிறார் என்பது தெளிவாகும்.

# அரசியல் - சட்டம், நீதி

அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு. 757

அன்பாக முகைத்தது இல்லறம்; அருளாக மலர்ந்தது துறவறம். இல்லறத்திற்கு அன்பு அடிப்படை; இல்லறத்தில் அன்பு மலர்ந்து மலர்ந்து அருளாகக் கனிந்து துறவாய் உலகத் தொண்டுக்கு உயிர் பக்குவமாகின்றது. இந்த அன்பு ஈனும் அருள் வாழ வளர சில காலம் ஒரு செவிலி தேவை; அவள்தான் பொருள். இந்த அடிப்படையை உணர்ந்து கொண்டால் வாழ்க்கையே ஒரு உலகப்பொது உத்தியின் வழிப் புலப்படுத்த விழைந்த திருவள்ளுவர் பெருநோக்குப் புலப்படும்.

மேலும் திருக்குறளின் மைய தத்துவம் ஒன்று உண்டு எனில் அது அறமே. அறமே இல்வாழ்வின் குறிக்கோள்; அறமே துறவு வாழ்வின் குறிக்கோள்; அறமே பொருள் வாழ்வின் குறிக்கோள். அறமே இன்ப வாழ்வின் குறிக்கோள். அறம்சாரா இல்வாழ்வு வாழ்வாகாது; அறம்சாரா துறவு வாழ்வு வாழ்வாகாது. அறம்சாரா பொருள் வாழ்வு வாழ்வாகாது; அறம்சாரா அரசவாழ்வு வாழ்வாகாது; அறம்சாரா இன்ப வாழ்வு வாழ்வாகாது; அறம் சார்ந்ததே வாழ்வு என்பதே வள்ளுவர் காட்டும் வாழ்வாங்கு வாழும் பொது நெறி; அதற்காக ஒவ்வொரு நிலையிலும் அவர் பொதுமை உத்தியைக் கையாண்டு அறம், பொருள், இன்பம் உலகளாவியதாக என்றும் எவர்க்கும் உரியதாக அமைய பெரிதும் தம் சிந்தனைப் போக்கைப் பொருத்தமாக அமைத்துக் கொள்கிறார்.

'செயற்பால தோரும் அறனே' 40

'அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை' 49

"அறன்இழுக்காது அல்லவை நீக்கி மறனிழுக்கா
மானம் உடையது அரசு" 384

"அறத்தான் வருவதே இன்பம்" 39

இசைபட வாழ்தல் உலகத்தோடு ஒட்ட ஒழுகல், எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு அவ்வது உறைவது அறிவு என்னும் குறள்கள் வழி வள்ளுவர் உணர்த்துவது சமுதாய இன்பம் இயையுமாறு சமுதாயத்திற்குக் கேடுபயவாது வாழ்க என்பதாகும். இதனையே சமுதாய நீதி (Social Justice) எனத் தற்கால நீதித்துறை அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். இதனால்தான் வள்ளுவர் வாய்மை பற்றிக் கூறும்போது சமுதாயத்துக்கு நன்மை பயப்பதே வாய்மை,

தீமை பயவாததே வாய்மை என உடன்பாட்டாலும் எதிர் மறையாலும் விளக்கி உரைக்கிறார்.

பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின் 292

வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல் 291

நீதி வழங்குதலில் (வழக்கின் கூறுகளை) ஓர்தல், (வாதி, பிரதிவாதி எவரிடத்தும்) கண்ணோடாமை. வாதி பிரதிவாதியின் செல்வம் செல்வாக்கு முதலியவற்றில் உள்ள ஏற்றத் தாழ்வுகளை நோக்காது இறைபுரிந்து குற்றத்திற்கு உரிய தண்டனையை நூலாரோடும் ஆராய்ந்து (தேர்ந்து) தண்டனை வழங்குவதே நீதி.

ஓர்ந்து கண்ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்து செய்வஃதே முறை. 541

"இறை புரிதல்" என்ற சொல்லிறகு 'நடுவு நிலைமை தவறாது ஒழுகல்' என்பது உரையாசிரியர் கருத்து. நடுவுநிலை என்பது என்ன?

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்து ஒருபால்
கோடா மையேதான்.........

மக்கள் யாவரையும் சமமாகப் பாவித்தல் வேண்டும் என்று மட்டும் கூறினால் அது நீதியின் முழுத்தன்மையைக் கூறியது ஆகாது. மக்களைச் சமன்செய்து பிறகுதான் சமமாகப் பாவித்தல் வேண்டும். முன்னது வெறும் நீதி; பின்னது சமூக நீதி. இதைத்தான் Principles of Social Justice என்ற கோட்பாடாக இன்றைய சட்டவியல் அறிஞர்கள் உருவாக்குகின்றனர்.

தொழிலாளிக்கும் முதலாளிக்கும் இடையே ஏற்படும் வழக்கில் வசதி குறைவாயுள்ள தொழிலாளிக்குச் சில சலுகைகள் காட்டப்பட வேண்டும்; முதலாளிக்குச் சில வாய்ப்புகளைக் குறைக்க வேண்டும்.

- பி.ஆர். பக்கிரி சங்கர், வள்ளுவர் வகுத்த அரசியல்
வள்ளுவர் கண்ட சட்டமும் நீதியும் (கட்) பக். 21, 22.

இன்றைய சமுதாய நீதி (Social Justice) என்ற கோட்பாட்டின் இன்னொரு கூறு கூட அதாவது நீதி எளிதாகக் கிடைக்க வேண்டும் (Social Justice should be cheap) என்பது கூட திருவள்ளுவரால் அன்றே எண்ணப் பெற்றுள்ளது என்பது

எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும் 548

முறை வேண்டினார்க்கு எளிய செவ்வியை உடையனாய் அவர் சொல்லியவற்றை நூலோர் பலவோரும் ஆராய்ந்து நின்ற உண்மைக்கு ஒப்ப முறை செய்யாத அரசன் பாவமும் பழியும் எய்தி தாழ்ந்த பதத்திலே நின்று தானே கெடும் (பரி. உரை).

இதனோடு

*காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்*
*மீக்கூறும் மன்னன் நிலம்.* *386*

வலியரால் நலிவெய்தி முறை வேண்டினார்க்கும், வறுமையால் வாடி குறைநேர்ந்தார்க்கும் அரசாங்க நிர்வாகத் தாரும் சான்றோரும் கூடியிருக்கும் நாளோலக்கத்தில் சென்று காண்பதற்கு எளியனாய் இருத்தல்.

திருக்குறள் அரசனது ஆடை, அணி, இருக்கை முதலியன பற்றியோ அமைச்சன், தூதன், படைத்தலைவன் முதலியோர் தம் புறத்துறுப்புகள், போர்க்கருவிகள் பற்றியோ கூறவில்லை. அரசியலுக்கு இன்றியமையாச் சிறப்பு இயல்களையே பொறுக்கி உணர்த்துகிறார். திருவள்ளுவர் ஊர்தோறும் குடியாட்சியும் தலை நகரங்களில் முடியாட்சியும் இருந்த காலத்தில் வாழ்ந்தவ ராதலின் இருவகை ஆட்சிக்கும் பொதுவான அடிப்படைகள் இன்ன இன்ன என்று அவருக்குத் தெளிவாக விளங்கின அவற்றை மட்டுமே எக் காலத்துக்கும் பயன்படுமாறு" (மு.வ. திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், ப. 62) பொதுநிலை உத்தி ஒன்றால் எடுத்துரைக்கிறார்.

"மேலும் நடைமுறையில் எதிர்ப்படும் மாற்றங்களையும் தோய்வுகளையும் ஏற்றுக்கொண்டு அதற்கு ஏற்ப லட்சியங்களை அமைத்துத் தரும் நூல் கௌடில்யரின் அர்த்தசாத்திரம்." ஆனால் அறத்தை முன்வைத்து நடைமுறை அரசியலை வகுப்பவர் திருவள்ளுவர்.

'கௌடலீயம் போன்று ஓரளவு கீழ்த்தர அரசியலில் வள்ளுவருக்கு உடன்பாடில்லை. வள்ளுவர் போன்ற மேதகை அல்லது மெய்ஞ்ஞானியிடமிருந்து இப்படிப்பட்ட அரசியல் தவிர வேறு எதை எதிர்ப்பார்க்க முடியும்".

இவ்விரு நூல்களும் (திருக்குறளும், மனுநீதியும்) முடியாட்சி பற்றிக் கூறும்முறை மாறுபட்டது என்பது குறிப்பிடத் தக்கது. திருக்குறள் எந்த ஒரு தனிப்பட்ட அரசைப் பற்றியோ ஆட்சி யமைப்பைப் பற்றியோ கூறாது பொதுவாக அரசர்க்கும் அரசாங் கத்திற்கும் இருக்கவேண்டிய தகுதிகளையும் தன்மைகளையும் எடுத்துரைக்கின்றது. ஆனால் மனுநீதி பரப்பளவாலும் மக்கள் தொகையாலும் அளவில் சிறியதாக உடைய அரசைப் பற்றியும், அவ்வரசில் யார் அதாவது எப்பிரிவைச் சேர்ந்தவர் ஆட்சி செலுத்தத் தகுந்தவர் என்பதைப் பற்றியும் குறிப்பிடுகிறது.

- வள்ளுவர் வகுத்த அரசியல் (கட்) வள்ளுவர்
கண்ட அரசியலும் மனவும், பக். 96-97,
திருக்குறள் ஆய்வக வெளியீடு, மதுரை, 1974.

திருவள்ளுவர், தகுதியுடைய எவரும் அமைச்சர்; சாதி குல வேறுபாடின்றி எவரும் அமைச்சர் என்கிறார்.

- டாக்டர் கோ. சுந்தரமூர்த்தி, வள்ளுவர் வகுத்த அரசியல்
(கட்), வள்ளுவர் கண்ட இறைவனும் வடநூல் மரபும்,
ப. 82, திருக்குறள் ஆய்வக வெளியீடு, மதுரை, 1974.

மன்னவன் தெய்வாம்சம், தெய்வப் பிரதிநிதி என்பது வள்ளுவத்தில் இல்லை. "எண்திசை காக்கும் தெய்வங்களின் தன்மைகளை ஓர் உருவாகப் பெற்றவன்தான் அரசன்" என்ற மனு தரும சாத்திரக் (vii-4) கூற்றும் உலகைக் காக்க இந்திரன், காற்று, இயமன், ஞாயிறு, தீக்கடவுள், வருணன், திங்கள், குபேரன் ஆகியோரின் அழிவில் கூறுகளைக் கொண்டு பிரமன்அரசனைப் படைத்தான்' என்னும் சுக்கிர நீதிக் கருத்தும் (1:71-72) வள்ளுவர் ஏற்றுக்கொண்டனவாகத் தெரியவில்லை.

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்." 388

என்ற குறளில் இறை என்று வைக்கப்படும் என்பதன் பொருளை 'மனிதர்க்கு நாயகன் என்று எண்ணப்படுவான்' (மணக்குடவர், பரிப் பெருமாள் உரை)

ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல் 702

என்ற குறள் பொருளோடும்

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும் 50

என்ற குறள் பொருளொடும் ஒப்பின் இந்தஉண்மை விளங்கும்.

இறைமைக் கொள்கை (The Theory of Divisity of kings) தெய்வ வழித் தோற்றம் (The Theory of Divice origin) தெய்வீக உரிமை (Divine Right of kings) இவை அரசைச் சமய நோக்கில் எல்லைகட்டுதலால் குறிப்பிட்ட நாட்டு, குறிப்பிட்ட காலக் கருத்துக்களாக அமைவதால் திருவள்ளுவர் பொதுமை உத்திக்கு மாறான இதனைத் தம் குறளில் எடுத்துரைக்கவில்லை எனக் கூறுவதில் தவறில்லை. சூரிய குலத்தினர், சந்திர குலத்தினர், அக்கினி குலத்தினர் என்ற மரபும் திருக்குறளில் இல்லை.

பதவி தகுதியால் அமைவது. ஆனால் மனுநீதி அமைச்சர்கள் அந்தணராக ஒரளவு அரசகுலத்தினராக இருத்தல் வேண்டும் என்கிறது. மனுநிதி கூறும் அரசர்போல் சுற்றியுள்ள மண்டலங் களைக் கைப்பற்ற வேண்டும் என்னும் போர்வெறி கொண்டவன் அல்லன் வள்ளுவர் காட்டும் அரசன். பகை நட்பாக் கொண் டொழுகுபவன் வள்ளுவ அரசன்.

"கிரேக்க ஆசிரியர்கள் பெரும்பாலும் தத்தம் காலச் சூழ்நிலையின் அடிப்படையில்தான் அரசு, அரசாங்கம், சட்டம், நீதி, உரிமைகள் முதலிய கருத்துக்களை வகுத்தனர். திருவள்ளுவர் வகுத்த அரசியல் கருத்துக்கள் தமிழகத்தில் இருந்த முடியாட்சிக்கு மட்டுமின்றி எவ்வகைப்பட்ட ஒரு அரசாங்க அமைப்பின் நல்லியல்புகளுக்கும் பொருந்துவனவாக இருக்கின்றன."

- பா. சூரியநாராயணர், வள்ளுவர் வகுத்த அரசியல் (கட்). திருவள்ளுவரும் கிரேக்க அரசியல் சிந்தனையாளர்களும், ப. 113.

# காதல் வாழ்வு

தன் இன்பத்தை உணர்ந்து களித்தல், தன் துன்பத்தை உணர்ந்து வருந்துதல் ஆகிய இவை எந்த உயிர்க்கும் பொதுவான தன்மைகளாகும். பிற உயிரின் இன்பத்தை உணர்ந்து மகிழ்தல், பிற உயிரின் துன்பத்தை நினைத்துக் கலங்குதல் ஆகிய இவை மக்கள் உயிர்க்கே சிறப்பாக அமைந்த தன்மைகள். ஒத்த அன்பும், பண்பும், அறிவும் வாய்ந்த காதலர் இருவர் வாழும் வாழ்க்கையில் ஒருவர் உறும் துன்பம் அவ்வளவும் மற்றவரும் உறுகின்றனர். இதுமட்டும் அன்று....... காதலன் தன் துன்பத்திற்கு வருந்துவதை விட தன் காதலியின் துன்பத்திற்காகவே மிகுதியாக வருந்துகிறான். அவ்வாறே காதலி தன் துன்பத்திற்காக வருந்துவதை விட காதலனுடைய துன்பத்திற்காகவே மிகுதியாக வருந்துகிறாள். இதனினும் உயர்ந்தபடி மற்றொன்று உள்ளது. அதுவே காதல் வாழ்வின் எல்லை எனலாம். அதாவது காதலனோ காதலியோ தன் துன்பம் எல்லாம் மறந்துவிட்டுத் தன் துணையின் துன்பத்திற்காகவே வருந்துதல்; தன் துணையின் பொருட்டாகவே உயிர் வாழ்தல், .......... தவம், நிலையாமை, துறவு, மெய்யுணர்வு, அவாவறுத்தல், ஊழ் முதலிய அரும்பொருள்களை வலியுறுத்திய திருவள்ளுவர் காதல் வாழ்க்கையையும் கலைச்சுவையுடன் விளக்கியுள்ள காரணம் இதுவே ஆகும்.

- டாக்டர் மு. வரதராசனார், திருக்குறளில் காதல்
ப. 151, திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு, இராம
கிருஷ்ண வித்யாலயம் பதிப்பு, சென்னை, 1963

திருவள்ளுவர் தான் அறவுரையும், அறிவுரையும் தருவதாகப் பெரும்பாலும் அமைத்துள்ள அறத்துப்பாலும் பொருட்பாலும் அங்கேயே இன்னார் இன்ன நாட்டார், இன்ன குலத்தார், இன்ன சமயத்தார் எனக்காட்டிக் கொள்ளவில்லை.

இன்பத்துப் பாலோ தலைவி, தலைவன், தோழி என்னும் மூன்று நாடக மாந்தர்தம் உரையாடல் உணர்வாடல் கொண்டு நாடகம் போல் திருவள்ளுவர் அமைத்துள்ளார். எனவே இங்கு அமைத்துள்ள பாடல்கள் முழுவதும் ஆசிரியன் நாடக மாந்தர் கூற்று இலக்கியமாகும்.

இலக்கண வகையால் காமத்தை விளக்கி உரைக்கும் காம சூத்திரம் போன்றது அன்று திருக்குறள். அப்படி இலக்கண

வகையால் காமத்தை உணர்த்தி இருப்பின் அது ஒரு குறிப்பிட்ட மொழி, பண்பாட்டு எல்லைக்குள் அடங்கிப் போயிருக்கும். ஆனால், திருவள்ளுவர் காமத்தைப் பெரிதும் மனம் சார்ந்த காதல் இன்பமாக உருவாக்கி இருப்பதால் அது பொதுமைத் தன்மை பெற்றதாக விளங்குகிறது.

இன்னொன்றும் இங்குக் கருதத்தக்கது. அறத்துப் பாலிலும், பொருட்பாலிலும் திருவள்ளுவர் தம் காலத்தில் வழக்கில் இருந்த அறநூல்களை, பொருள் நூல்களைக் கருத்தில் கொண்டு தன் சொந்த அனுவத்தோடு ஒப்பிட்டும், உறழ்ந்தும் தாம் கண்ட உண்மைகளை உரைத்தார். ஆனால் காமத்துப் பாலில் மட்டும் அவர் தமிழுக்கு என்று அமைந்த மரபையே பின்பற்றியுள்ளார் என்பது அனைவரும் அறிந்ததே. மேலும், முதல், கரு, உரிப்பொருள் எனப் பிற இலக்கியங்களாகிய அகத்திணை எட்டுத்தொகை நூல்கள் குறிப்பிடுவது போல, முதல், கரு, உரி என்னும் மூன்று பொருள் களுக்கும் குறுகிய ஈரடியால் அமைந்த திருக்குறளில் பெரிதும் இடம் இல்லை; எனவே உரிப்பொருள் மட்டுமே சிறப்பாக இடம் பெற்றன என்பது திருக்குறள் ஆய்வாளர் பலர் கருத்து. ஆனால் இதனை வேறு வகையாகவும் நோக்கலாம்.

முதல் பொருள் நிலமும் பொழுதும் பற்றியது; கருப் பொருள்

*தெய்வம், உணாவே, மா, மரம், புள், பறை,*
*செய்தி, யாழின் பகுதியொடு தொகைஇ*
*அவ்வகை பிறவும் என்மனார் புலவர்*
*- தொல்பொருள், அகத்திணை இயல் நூற்பா, 964*

*நிலமோ*

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவறை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருண்ன் மேய பெருமணல் உலகமும்" *951*

என நிலத் தெய்வங்களைச் சுட்டும்.

இவ்வாறு முதற்பொருள், கருப்பொருள் இரண்டும் ஓரிடத்தை, ஒரு குறிப்பிட்ட பண்பாடுடைய மக்களைக் காட்டிக் கொடுத்துவிடும். அகம் எனக் கருதப் பெறும் பட்டினப்பாலை பாட்டுடைத் தலைவன், அவன் நாடு, அவன் நகர்வழித் தமிழ் வேந்தன், தமிழ்நாடு, தமிழ் ஊர் என்பனவற்றைக் காட்டிக் கொடுத்திடல் காணலாம். எனவே, காதல் உணர்வையும் உலகப் பொதுமையாகக் கருதிய திருவள்ளுவர் தம் பொதுமை உத்திக்குத் தடையாக அமையும் முதல், கருப் பொருள்களைப் பெரிதும் நீக்கி உரிப்பொருளுக்கே இடம் தந்துள்ளார் எனவும் எண்ணலாம்.

மேலும், அகத்திணை மரபுப்படி பரிமேலழகர் கூற்றுப் படி, காமத்துப் பாலில் அமைந்துள்ள இருபத்தைந்து அதிகாரங் களையும் தொடர்ந்த ஒரு காதல் நாடகமாகப் படைத்துக் காட்டுவதும், மேலும் களவு, கற்பு என்ற இரு கைகோளாகப் பிரித்து இயற்றியமையும் இங்குக் கருதத்தக்கது. தமிழுக்கே உரியவாறு உள்ள காமத்துப் பாலையும் கால, இடக் கட்டற்றதாகப் படைப்பதே திருவள்ளுவர் கருத்தாதல் கூடும்.

திருக்குறளில் ஊடல் உள்ளது. அது மருதத்திணை உரிப் பொருள். ஆனால் சங்க அக இலக்கியம் காட்டுவது போலத் தலைவனின் பரத்தையர் பிரிவால் நிகழும் ஊடல் அன்று அது. அக இலக்கியங்களில் இடம்பெறும் பரத்தையர் சேரி, பரத்தையர் வாழ்க்கை, புனல் விளையாட்டு, ஆடல் பாடல் முதலிய மரபுவழி அக மருதத்திணைக்காட்சிகள் இங்கு இடம்பெறவில்லை. இங்கு நிகழும் ஊடல் அன்பின் பெருக்கால், காதல் ஆர்வச் சிறப்பால், காதல் அன்பு உரிமையால் காதலி கற்பித்துக் கொண்டு ஊடும் ஊடலே இடம்பெறுகிறது. பரத்தையர்க்குத் திருவள்ளுவர் அமைத்த காமத்துப்பாலில் இடம் இல்லை.

> பெண்ணியலார் எல்லாரும் கண்ணின் பொதுஉண்பர்
> நண்ணேன் பரத்தநின் மார்பு 1311
>
> கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்
> காட்டிய சூடினீர் என்று 1313
>
> யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்
> யாரினும் யாரினும் என்று. 1314
>
> இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்
> கண்ணிறை நீர்கொண் டனள் 1316
>
> இல்லை தவறவர்க்கு ஆயினும் ஊடுதல்
> வல்லது அவர்அளிக்கு மாறு 1321

இவ்வாறு ஊடல் உளவியல் அடிப்படையில் அமைந்துள்ளதே அன்றிப் பொருளியல், உடலியல் (பரத்தையியல்) அடிப்படையில் இல்லை என்பது உணரத்தக்கது. காதல் வாழ்வில் ஊடலின் இன்றியமையாமை, புலவி நுட்பம் உணர்ந்த திருவள்ளுவர் ஊடலால் புலவியால் விளையும் நன்மையை மட்டும் புலப்படுத்தி யுள்ளார். அங்குப் பரத்தையர் உறவு இல்லை; காதலியின் உரிமை மட்டுமே உண்டு.

மனிதன் முழுமனிதனாக உருவாகும் ஒரு பள்ளியாகத் திருவள்ளுவர் காமத்துப்பால் விளங்குகிறது. தான், தனக்கு, தனக்கே என்னும் யான் எனது என்னும் செருக்குக் கரைந்து மறைந்து போவது காதல் வாழ்வில்தான். 'தோல்வி துணை அல்லார் கண்ணும் கொள்ளும்' சான்றாண்மை துவக்கக் கல்வி பெறுவது காதல் வாழ்வில்தான்.

காமம் உடல் கவர்ச்சி, உள நெகிழ்ச்சி இரண்டும் கொண்டது. உடல் கவர்ச்சியில் மட்டும் நிகழும் ஒருதலைக் காமம், பொருந்தாக் காமம் வள்ளுவத்தில் இல்லை. அன்பின் ஐந்திணையே இங்கு இடம்பெற்றுள்ளது. 'அணங்குகொல் ஆய் மயில் கொல்லோ' என்ற உடல் பொலிவு அளவில் வள்ளுவக் காதல் முடிந்துவிடுவதில்லை.

இருநோக்கு இவள்உண்கண் உள்ளது; ஒருநோக்கு
நோய்நோக்கு ஒன்(று) அந்நோய் மருந்து 1091

யானோக்கும் காலை நிலன்நோக்கும்; நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும். 1094

இவ்வாறு அகம் நோக்கி அமைவது வள்ளுவக் காதல். காதலர் இருவர் கணவனும் மனைவியுமாக இல்லறம் மேற்கொண்டு அன்பு வாழ்க்கை நடத்துவார்கள். நாடெங்கும் இப்படி இருவர் இருவராக இல்வாழ்க்கை நடத்துவோர் காணப்படுவார்கள். இவர்கள் பலர் சேர்ந்த அமைப்பே ஊராகவும், இப்படிப்பட்ட ஊர்கள் பல சேர்ந்த அமைப்பே நாடாகவும் விளங்கும். இவர்களுக்கு உறைவிடமும் உணவும் உடை முதலியனவும் பங்கிட்டு அளித்துக் காப்பாற்றும் முறைக்கே ஆட்சிமுறை என்று பெயர் இருக்கும். அந்த ஆட்சி முறையில் இவர்கள் எல்லோருக்கும் பொறுப்பும் பங்கும் இருக்கும். ஆகவே, மக்களின் இல்வாழ்க்கைக்குத் துணைசெய்யும் நாட்டாட்சி நன்கு நடக்க வேண்டும் என்ற பொறுப்புணர்ச்சியே கல்வியின் முதல் நோக்கமாகவும் ஒழுக்கத்தின் முதல் படியாகவும் இருக்கும். அந்த நல்லுணர்ச்சியின்படி இவர்களில் ஒவ்வொரு வரும் தம் தம் பங்குக்குரிய தொழிலைத் தவறாமல் செய்து முடிப்பார்கள்; அந்தத் தொழில் உடலுழைப்பாகவும் மூளையுழைப்பாகவும் இருக்கும்; எந்தக் கடமையானாலும் எத்தகைய தொழிலானாலும், உழைப்பை எல்லோருக்கும் பங்கிட்டளிக்கும் நல்லமுறை இருக்கும்; அதனால், பொறாமைக்கோ, போலியுயர்வுக்கோ, சோம்பலுக்கோ, பேராசைக்கோ இடமில்லாமல், உழைத்தல் கடமை, வாழ்தல் முறைமை என்ற பொது உணர்ச்சி நிலவும். அந்த நிலையில் காதலர்க்கு நாட்டிலும் ஒரு தக்க இடம் இருக்கும்; வீட்டிலும் தக்க உரிமை இருக்கும். வீட்டில் வாழும் உரிமையை நினைந்து இன்புற்று, நாட்டுக் கடமையை ஊக்கத்துடன் செய்யும் வழக்கம் இயற்கையாகிவிடும்.

திருவள்ளுவர் கூறும் காமத்துப்பாலில் இத்தகைய நல்லுலகையும் அதில் வாழும் காதலரையும் காண்கின்றோம்.

- டாக்டர் மு. வரதராசன், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், பக். 60, 61

காதலில் பண்பட்ட மனம் கற்பில் பயன்பட்டுத் துறவில் மனிதப் பிறவியின் பயனை எய்துகிறது. மற்ற உயிரின் துன்பம் தன்

துன்பம் போல் உணர்ந்து உருகச்செய்யும் இந்த மனப்பண்பு விரிந்து விரிந்து எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி வாழும் வாழ்வின் ஒரு பெருநிலையை வழங்குகிறது. இந்த மானுடக் காதல் தெய்வீகக் காதலாக மலர்வதைக் கண்ட சான்றோர் சிலர் திருவள்ளுவர் காமத்துப்பாலே கடவுளை அடையும் நெறி என்றும் கொள்வர்.

> *'ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்குஇன்பம்*
> *கூடி முயங்கப் பெறின்'* 1330

என்ற குறளுக்கு இறைவனோடு ஊடுதல் இந்த உலக வாழ்வு; சிற்றின்பம். அதனை விடுத்து இறைவனோடு கூடுதல் மறுமை வாழ்வு; பேரின்பப் பெருவாழ்வு என்று கொள்வர்.

பிணங்குவதால் காதல்பெருகி இன்னும் அதிகரிக்கும். அதைவிட மேலான இன்பம் வாழ்க்கை இறுதியில் நீடுவாழ்வு மலர்கையில் இறைவனோடு முடிவில்லா இன்பம் பெறுதல். அந்த இன்பத்தைப் பெற்றால்தான் (பெறின்) மனித வாழ்வின் இறுதிக்கதி நிறைவேறும்; வீடுபேறு கிடைக்கும். 'பெறின்' என்பது சிற்றின்பத்தில் மூழ்கியிருந்தால் பெற இயலாது என்பதை உணர்வது.

*- டாக்டர் இரா. அருளய்யா, திருக்குறள் புத்தாய்வு, ப. 970, மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை, 1987.*

**காதன்மையும் இறைமையும்**

திருவள்ளுவருடைய திருக்குறள் ஆண் பெண் பாலுணர்வுகள் பற்றி, வாத்சாயனருடைய காமசூத்திரங்களைப் போல உள்ளதை உள்ளவாறு ஆராய்ச்சி நோக்கில் நுணுகி ஆராயவில்லை. மாறாக நாயகன் (இறை) நாயகி (உயிர்) நினைவிலும் செயலிலும் உண்மையான அத்துவித உறவில் ஒன்றும் மேன்மைக் காதல் - அன்பு பற்றி அறிய கவிதை ஓவியம் ஒன்றை நமக்கு வழங்குகிறார்.

- Dr. T.P.M. Pageant of Tamil Literature

இறுதிக்கண் நின்ற இன்பத்துப்பால் இல்லறத்தின் பாலதான காதலின்பமொன்றனை மட்டும் உணர்த்துவதன்று. ஆழ்ந்து நோக்குவோர்க்கது துறவறத்தின்பாலதான திருவருளின் பத்தையும் ஒருங்கு உணர்த்துவதேயாகும்.

*- மறைமலையடிகள் பழந்தமிழ்க் கொள்கையே சைவசமயம், ப.74.*

இவ்வாறு எல்லா மானிட உயிர்க்கும் பொதுவாகிய உள்ளத்துக் காதல் உணர்வைச் சிறப்பித்துப் பாடுவதால் அந்த மானுடக் காதல் தெய்வக் காதலாகக் கருத வாய்ப்புத் தந்தது. காமத்துப்பாலைத் திருவள்ளுவர் பாடியுள்ளமையும் உடற்காமக் குறிப்புகளைப் பெரும்பாலும் சுட்டாமையும் அவர்தம் பொது நிலை உத்திக் கோட்பாட்டைப் புலப்படுத்துகிறது எனலாம்.

## துணைநூற் பட்டியல்


1. அருளப்பா, டாக்டர் இரா., **திருக்குறள் புத்தாய்வு**, மெய்ப் பொருள் பதிப்பகம், சென்னை, 1987.
2. இராஜா செட்டியார், பி.ஏ.,பி.எல்., எஸ். **திருக்குறள் ஆராய்ச்சிக் கட்டுரைகள்**, பகுதி 2, கம்பன் பதிப்பகம், சென்னை, 1985.
3. **உலகத் திருக்குறள் மாநாடு கருத்தரங்கக் கோவை**, தொகுதி i, ii, iii, தமிழ்நாடு திருக்குறள் பேரவை, திருச்சிராப் பள்ளி, 1991.
4. காமாட்சி சீனிவாசன், **குறள் கூறும் சமயம்**, காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1979.
5. கேசிகன் புலியூர், **சிலப்பதிகாரம்** (உரை), பாரி நிலையம், சென்னை, 1958.
6. கோதண்டராமன், டாக்டர் பொன்., **திருக்குறள் ஆய்வு மதிப்பீடு** (பொதுப் பதிப்பாசிரியர்), சென்னைப் பல்கலைக்கழகம், 1987.
7. கோவிந்தசாமி, டாக்டர் மு., **திருக்குறளும் பிற உரையாசிரியர் களும்**, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1975.
8. சுந்தரமூர்த்தி, டாக்டர் இ, **திருக்குறள் நடையியல்**, ஐந்திணை பதிப்பகம், சென்னை, 1987.
9. மாணிக்கம், வ.சுப., **திருக்குறட் சுடர்**, மணிவாசகர் நூலகம், சென்னை, 1987.
10. முருகரத்தினம், டாக்டர் தி., **குறள்கூறும் இறைமாட்சி**, மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை, 1974.
11. முருகரத்தினம், டாக்டர் தி., **வள்ளுவர் வகுத்த பொருளியல்**, (தொகுப்பு, பதிப்பாசிரியர்), மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை, 1975.
12. முருகரத்தினம், டாக்டர் தி., **குறள் கூறும் அரசு**, வள்ளுவர் வகுத்த அரசியல், மதுரை பல்கலைக்கழகம், மதுரை, 1974.
13. முருகரத்தினம், டாக்டர் தி., **குறள் கூறும் அரசு**, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1982.
14. முருகன் ப., (தொகுப்பாசிரியர்) **வள்ளுவம் பன்னோக்குப் பார்வை**, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1991.
15. மோகனராசு, டாக்டர் கு., **ஒப்புமை ஒளியில் வள்ளுவம்**, வள்ளுவர் கழகம், சென்னை, 1980.
16. வடிவேலு செட்டியார் கோ., **திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும் (அறத்துப்பால்)** (தெளிபொருள் விளக்கமும்), மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை, 1972.
17. வடிவேலு செட்டியார் கோ, **திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும் (பொருட்பால்)**, தெளிபொருள் விளக்கமும்), மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை, 1976.
18. வடிவேலு செட்டியார் கோ. **திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும் (காமத்துப்பால்)**, (தெளிபொருள் விளக்கமும் ___ ), மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை, 1976.
19. வரதராசன், டாக்டர் மு., **திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்**, பாரிநிலையம், சென்னை, 1979.
20. யோகிராஜ் வேதாத்திரி மகரிஷி, **திருக்குறள் உட்பொருள் விளக்கம்**, வேதாத்திரி பதிப்பகம், ஈரோடு 1999.
22. ஐகந்நாதன் கிவா., **திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு**, இராமகிருஷ்ண வித்யாலயம், கோவை, 1963.
22. ஜெயமோகன், **சங்கச் சித்திரங்கள்**, கவிதா பப்ளிகேஷன், சென்னை, 2002.

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113**

**அண்மை வெளியீடுகள்**

| | |
|---|---|
| தமிழிலக்கியத்தில் மனித நேயம் | 115.00 |
| தமிழில் பிறதுறைக் கோட்பாட்டாய்வுகள் வரலாறும் மதிப்பீடும் | 25.00 |
| வ.உ.சி ஒரு பன்முகப் பார்வை | 25.00 |
| இலக்கண நூல்களில் கருத்து வளர்ச்சி | 35.00 |
| சுவடிப்பதிப்புக்கலை வழிகாட்டி டாக்டர் உ.வே.சா | 50.00 |
| தொல்காப்பியத் தொடரியல் | 120.00 |
| மொழி பெயர்ப்புத் தமிழ் | 60.00 |
| சங்கத் தமிழரின் மனிதநேய மணிநெறிகள் | 45.00 |
| தெ.பொ.மீ.யின் தமிழ்த் தொண்டும் மொழியியல் பங்களிப்பும் | 25.00 |
| சமூகத்திலும் இலக்கியத்திலும் ஊனமுற்றோர் | 80.00 |
| பாரதியின் சமுதாயச் சிந்தனைகள் | 25.00 |
| மூதறிஞர் மு. இராகவையங்கார் | 40.00 |
| ம.பொ.சி.யின் பார்வையில் தமிழ்மொழி இலக்கியம் பண்பாடு | 30.00 |
| தணிகைமணி வ.சு.செங்கல்வராயப் பிள்ளை | 50.00 |
| தட்சிணாமூர்த்தி குருமுகம்-100 | 50.00 |
| நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார் | 50.00 |
| அருந்தமிழ் அறிஞர் அ.ச.ஞா. | 50.00 |
| ஆராய்ச்சிப் பேரறிஞர் தி. வை. சதாசிவ பண்டாரத்தார் | 45.00 |
| விவிலியத் தமிழ் | 40.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள்- 3தொகுதிகள் | 260.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 180.00 |
| நாவல்கலையியல் | 50.00 |
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ.நா.அப்புசுவாமி | 60.00 |
| சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கியம் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| தெசிணி-யின் தமிழாக்கப் பாடல் திரட்டு | 50.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |
| இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் சித்திரிக்கும் அறியப்படாத வாழ்வும் பண்பாடும் | 40.00 |

**533 திருக்குறளில் பொதுநிலை உத்திகள் 30.00**